*Tenral*

*Malar 3, ital 24*

*February 16, 1957*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர் கண்ணதாசன்

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணு. | வெளிநாடு மூன்றணு | அலுவலகம் : 'தென்றல்' சென்னை-6.

மலர் 3 | சென்னை | 16-2-57 | சனிக்கிழமை | இதழ் 24


## கம்யூனிஸ்டுக் கல்யாணம்

உலகில் அளவுக்கு அதிகமாகப் போற்றப்படுபவரும், தூற்றப்படுபவரும் பெண்கள்தான். அத்தகைய பெண், இல்லாதவர் வீட்டில் செல்லப்பிள்ளையாகப் பிறந்தாலும், தொல்லைகள் என்னும் சூருவளியில் அசப்படாது தப்பமுடியுமா?

நான் ஏழை; அதிலும் பெண்; பெண்ணிலும் எண்ணிறந்த இன்பநினைவுகள் தோன்றும் பருவப்பெண். புண்! அதிலும் புரையோடிய புண்!—அதிலும் புழுவைத்த புண்!—என்பது போலில்லை என் நிலை?

தலைவனில்லாத குடும்பம், இலையுதிர்ந்த மரம். என் குடும்பமும் அப்படிப்பட்டதுதான். அஞ்சலை — என் தாய், உழைப்பின் உரு. உழைப்பிற்கேற்ற ஊதியம் கிட்டாத இந்தத் தரித்திரம் பிடித்த தமிழ்நாட்டில் என் தாயொருத்தியின் உழைப்பு, உணவிற்கே பற்ருதபோது சேமிப்பதற்கு வழி? வறுமையின் கோர நர்த்தனம் எங்கள் வீட்டில் நாள் தவருது நடந்தது. குடும்பத்தின் குரல்வளையை நெறிக்கும் பஞ்சம், எங்களோடு பங்காளித்துவம் கொண்டாடும்போது, என் திருமணத்தைப் பற்றி நினைக்க நேரமேது? நினைத்தாலும் வழியேது?

நான் பருவமடைந்து பத்தாண்டுகளாகி விட்டன. அப்பப்பா! கடந்த பத்தாண்டுகளிலும் என்னைப் பெண் பார்க்க வந்து போனவர்கள் எத்தனை பேர்! அத்தனை பேருக்கும் என்னைப் பிடித்திருந்தும், நானிருந்த ஏழ்மை பிடிக்காது போய் விட்டதுதான் விந்தை!

செந்தாமரை சேற்றில் முளைக்கிறது என்பதற்காக அதை ஒதுக்கிவிட எண்ணுத சமூகம், என் ஏழ்மையைக் கண்டு ஏன் பயந்தோட வேண்டுமோ தெரியவில்லை. நான் மட்டும் பணக்காரப் பெண்ணுகவல்ல, நடுத்தரப் பெண்ணுகப் பிறந்திருந்தால்கூட, இந்நேரம் எனக்கு மணம் முடிந்திருக்கும். பிறக்கும் முதல் குழந்தை பெண்ணுகவிருந்தால், அப் பெண்ணும் பருவ வயதை எட்டிப் பிடிக்கும் மொட்டாக விருப்பாள்.

பால் மணம் மாருத பச்சைக் குழந்தையிலிருந்து, பழுத்து நரைத்த கிழவர்வரை, என்னைத் தன் வீட்டுக்காரியாக்க—மனைவியாக்க வந்தனர்; பார்த்தனர்; யாரும் பெற்றிராத அழகைப் பார்த்துப் பல்லைக் காட்டினர்; பாராட்டினர். பணமில்லாத பஞ்சை என்ற ஒரே காரணத்திற்காகப் பயந்தோடினர்.

பொழுது விடியத் தவறினுலும், என்னைப் பெண்பார்க்க வருவோர் வரத் தவறுவதில்லை. ஆனல், அப்படி வந்தவர் யாருக்கும் பொருத்தம் பார்க்கும் அளவுக்குக்கூடத் துணிவு வந்ததில்லை. அத்தகைய மாருத போக்கிற்கு ஒரே ஒரு மனிதர் மட்டும்தான் விதிவிலக்காக வந்தார்.

தனிக்கோடி! இது அவரது பெயர். அந்த வட்டாரத் தீவிர கம்யூனிஸ்டுவாதி. பல பயங்கரக் கொலை, கொள்ளை வழக்குகளில் சம்பந்தப்பட்டு, அதனல் பல்லாண்டுகள் சிறைத் தண்டனை அனுபவித்தவர். முதலாளித்துவத்தை வன்முறைச் செயல்களால் முறியடிப்பதே அவரது தொண்டு என்று அவரைப்பற்றி நான் முன்னமேயே கேள்விப்பட்டிருக்கிறேன்.

'ஏழையின் பங்காளன்' என்ருல், அவன் ஏழையினும் ஏழையாகத்தானே இருக்கமுடியும்? தாழ் நிலையிலிருப்பவனுக்குத்தானே உயர்நிலையைக் கண்டு பொருமை பிறக்க நியாயமுண்டு? எனவே, சீர்திருத்தவாதிகளை உருவாக்கும் கூடாரம், ஏழை உலகம் என்பது என் முடிவான எண்ணம். என் எண்ணத்திற்கு ஒரு முதல்தரமான எடுத்துக்காட்டு தனிக்கோடியேதான். எனக்காவது ஆதரவாக ஒரு தாயிருக்கிருள். அவர் அதற்கும் அருகதையற்றவர்.

தனிக்கோடிக்குச் சொந்தமானது, என்புந் தோலுமுடைய அவர் உடம்பு ஒன்றேதான்! அவருக்கு உரிமையான சொத்து, மதிப்புடையதும், மாற்ருருக்குப் பேரம் பேச முடியாததுமான குடியுரிமைதான்! அவர் தங்குமிடம், விரிந்து பரந்த தமிழகத்தின் நிலப்பரப்பு!

இத்தகைய சம்பத்துப் பெற்ற தனிக்கோடி என்னை மணக்க முன் வந்தார், சற்றுத் துணிவோடு! மலர்ந்த மலர் கொடியிலேயே வாடி வதங்குவதைவிட, வறண்ட தலையிலாவது சில விஞடிகள் ஏறியமர்வது சிறப்புடையதல்லவா?

அந்த ஆசை என்தாய் உள்ளத்திலே அரும்பிவிட்டதாலோ என்னவோ என்னை தனிக்கோடிக்கு மணமுடிக்க இசைவு தந்துவிட்டாள், என் தாய். சோடையோ சொத்தையோ அது விதையின் தோற்றத்தை ஒத்திருந்தால் அதை விதைப்பதில்லையா? அதைப்போலத்தான் நானும், "எனக்கொரு ஆண் துணை கிடைக்கிறது. அத்துணை கொண்டு இல்லற இன்பம் காணுவோம்" என்று ஆனந்தக் கனவு கண்டேன்.

என் திருமணச் செலவிற்கென கொடிய வறுமைக் காலத்திலும் அழித்துவிடாது பாதுகாத்து வைத்திருந்த என் தாயின் தங்கத் தோடுகள், பணத்தாள்களாக உருமாறின. அதைக்கொண்டு சில தட்டுமுட்டுச் சாமான்களும், மலிவான விலையுள்ள மளிகைச் சரக்குகளும் முறையே கல்யாணச் சீருகளாகவும், செலவுப் பொருள்களாகவும் வாங்கி வந்தாள் என் தாய். தலையிலும் கையிலுமுள்ள அந்தச்சாமான்களை இறக்கி வைக்கக் கூடவில்லை. அதற்குள் என்னைப் பார்த்துப் போகவந்த நல்ல முத்துப்பாட்டி, தன் பொக்கை வாயைத் திறந்து பொரிந்து தள்ள ஆரம்பித்து விட்டாள்.

"அடி கேடு கெட்டவளே! அந்தப் பய, அமராவதியைக் கட்டிக்கப் போறேன்னு அங்கே கெலிமிதம் கொண்டாடுருன்; நீ இங்கே பொன்னை வித்து, பொருளை வித்து கண்ணுளச் சாமான் வாங்கிக்கிட்டுத் திரியுறியேடி!"

"அமராவதியா...? யார் அந்தப் பொண்ணு?"

"இரும்புக்கடை இருளனில்லே...ஆமாடி அவந்தா இந்த ஊருக் கர்ணன்! அந்தத் தாராளப் பிரபு, அஞ்சு ஏக்கர் நிலமும், ஐயாயிரம் ரூபா ரொக்கமும்

— 6-ம் பக்கம் —

# ★ மாஸ்கோ பாதை ராஜ வீதியல்ல! ★

★ இரா. இளஞ்சேரன் ★

அந்த பிரமாண்டமான சிலையைச் சேற்றிலே தள்ளிவிட்டு எல்லோரும் ஆர்ப்பரித்தார்கள்!

புதிய சரித்திரம் எழுதப்பட்டது. புகழின் செல்வர்-பொதுவுடைமையின் தத்துவ விகாசம் என்றெல்லாம் போற்றப்பட்ட அவரது திருப்பெயர் 'துரோகி'களின் பட்டியலிலே இணைக்கப்பட்டது! நேற்றுவரை அந்தப் பெயர் தாரக மந்திரம்; அவர் சொன்னவை அத்தனையும் முத்துக்கள். இன்றோ அந்த சொரூபம் ஜீவலட்சியங்களை மறைக்கும் புகைப்படலமாகச் சித்தரிக்கப்பட்டது! புதிய சரித்திரம், முற்றிலும் மாறுபட்ட 'வெள்ளை கிற வரலாறு' சிலரால் படைக்கப்பட்டது!

ஸ்டாலின் வீழ்ச்சி சரித்திரப் பிரசித்தமான சேதி! அந்த நிகழ்ச்சியால் தொழிலாளர் வையம் மட்டுமல்ல, முதலாளித்துவ முகாம் கூட திகைத்துத்தான் போய்விட்டது.

குணதோஷ விமர்சனங்களை உலக ஏகாதிபத்திய வெறியர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பது குருசெவின் புதிய குற்றச்சாட்டு. நினைப்பில் பழுதில்லை! எதிரிகளின் இயல்பும் அதுதானே! ஆனால், திரைக்குப் பின்னாலே நிகழ்ந்த சிவப்புக் கூத்துக்களை உலகம் மறந்தாவிடும்? சரித்திரத் திருத்தங்களும் கோணலாகிப் போன இலட்சிய விளக்கங்களும் சோவியத்தைக் கட்டுப்படுத்தலாமே தவிர, உண்மையைத் தொடக்கூட அதற்குத் தகுதியில்லை.

பெரியா என்ற அனுபல்லவிக்கு ஸ்டாலின் சரணமாகப் பயன்படுத்தப்பட்டார். இதுதான் உண்மை. யார் இந்தப் பெரியா? முதலாளித்துவ பிற்போக்குச் சக்தியின் கையாள் என்கிறது இப்போதைய ரஷ்ய கையகராதி. பெரியாவின் பிணத்தின் மேலே ஸ்டாலினின் புகழ்ப்பத்திரம் கிழித்தெறியப்பட்டதில் பயங்கர வரலாறே புதைந்திருக்கிறது! இதனை ஏதோ 'உள் பூசல்' என்று தள்ளிவிடுவதற்கில்லை. முதலாளித்துவத்தின் பிறவிக் குணமான 'அராஜக ஓலம்' சோவியத்தில் எழுந்தது விந்தைதானே!

பெரியா ஸ்டாலினின் பிரசித்தமான மாணுக்கர். ஸ்டாலினின் வெற்றிக்காக அவர் தன்னையே அர்ப்பணித்திருந்தார். நன்மையோ, தீமையோ கட்சியின் கட்டுப்பாட்டிற்காக—ஸ்டாலினிஸ சித்திக்காக பெரியா இதயம் நடுங்கும் கொடுமைகளைச் செய்திருக்கிறார். ஏனெனில் அவர் உண்மையான பொதுவுடைமைவாதி! குருவின் எண்ணம் சீடனின் செயலாகப் பரிணமித்தது.

ஸ்டாலின் போலவே பெரியாவும் டிரான்ஸ் கெக்காஷியா பகுதியில் கட்சியின் 'ஜீவநாடி'யாக விளங்கினர். லெனினின் மரணத்திற்குப் பின் போல்ஷெவிக் கட்சியில் உருவான போராட்டம் 1928-ல் ஸ்டாலினின் வெற்றி முழக்கத்தோடு இறுதி கண்டது. இந்த ஐந்து வருட இடைவேளையிலே ரகசியப் போலிஸின் தலைவரான பெரியா ஸ்டாலினின் உள்ளம் மகிழும்படி கட்சியை 'சுத்தம்' செய்தார்.

1934ல் கிரோவ் லெனின்கிராடில் கொலையுண்டான். பெருமைமிக்க சோஷியலிஸ அமைப்பிற்காக மாற்றுக் கருத்தினர்களைச் சாகடிக்கும் திருப்பணி அன்றுதான் ஆரம்பமாயிற்று! பெரியாவின் அதிகார ஆர்ப்பரிப்பிற்கு பலியான இலட்சிய உள்ளங்களின் பட்டியல் மிக மிகப் பெரிது! புரட்சியின் போதும், அதன் பின்னரும் கட்சியின் உண்மை உழைப்பாளிகளின் தியாகங்கள் திரித்துக் கூறப்பட்டன. பிரசித்தி பெற்ற தலைவர்கள் எல்லோரும் சோவியத்தின் துரோகிகளாகச் சித்தரிக்கப்பட்டார்கள்!

பெனு கிட்ஸெ
எல்லியாவ்
சௌமியான்
பிபினேஷ்விலி
மகராட்ஸே
ஷோணிக்கிட்ஸே
புகாரின்
கிராஸ்லின்

இவர்களெல்லாம் போல்ஷ்விக் இயக்கத்தின் பிரசித்திபெற்ற தலைவர்கள்: லெனினின் உண்மையான தோழமையைப் பெற்றவர்கள். இவர்களின் முன்னிலையில் ஸ்டாலின் பெற்றிருந்ததெல்லாம் சாமான்ய இடம்தான்! பெரியாவிற்கு இதனைச் சகித்துக்கொள்ளும் திராணியில்லை. உண்மையான இயக்க வரலாற்றை எழுதிய எழுத்தாளர்கள் ஒவ்வொருவராகக் காணமற் போனார்கள்! பொதுவுடைமை சோவியத்திற்காக அவர்களின் ரத்தம் தெளிக்கப்பட்டது!

புகழ்பெற்ற முன்னணி வீரர்களை துரோகிகளாக்கி மாறுபட்ட புதிய சரித்திரத்தை எழுதினர் பெரியா. **'On the History of the Bolshevik Organisation, Transcacasia'** எனும் நீண்ட தலைப்பிலே இது வெளியிடப்பட்டது. இந்தப் பொய்மைகளின் தொகுப்பிலே ஸ்டாலினின் 'மகத்துவம்' பெரிதாக்கிக் காட்டப்பட்டது. இயக்கத்தில் அவரது உழைப்பு பிரமாண்டமானதாகப் புகழப்பட்டது. கிராஸ்லின், மகராட்ஸே, சௌமியான் போன்றோர்தான் கெக்காஷியா இயக்க வரலாற்றின் முதல்வர்கள். இவர்களை விட ஸ்டாலின் எதையும் பிரமாதமாகச் சாதித்துவிடவில்லை.

பெனுகிட்ஸே புகழ்மிக்க தலைவன். பெரியா பரம்பரை, அரசியல் ஆரம்பப் பள்ளியிலே படித்த நாளிலே ஜாரை எதிர்த்துப் போர்க்குரல் எழுப்பிய செயல்வீரன். பெரியாவின் புதிய சரித்திரம் வெளியிடப்பட்டதும் இவன் சுட்டுக் கொல்லப்பட்டான்! ஜினோவீவ், ராடெக், காமனோவ், புகாரின் போன்ற எண்ணற்ற முன்னணி வீரர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள். எல்லாம் ஸ்டாலினுக்காக! பெருமைமிக்க சோவியத்திற்காக! பாட்டாளிகளின் சொர்க்க நிர்மாணத்திற்குத் தலைவர்களின் உயிர்த்துடிப்புகள் தேவைப்பட்டன!

லெனினின் வாரிசாக விளங்கிய ட்ரோட்ஸ்கி அமெரிக்காவில் வெறியனால் வெட்டி வீழ்த்தப்பட்டான்! ஜாரின் வெங்கொடுமையிலே வினையாடிய மாவீரர்களை சைபீரியா பனிப்பாலையிலே வாழ அருளினன் பெரியா.

மார்க்ஸிய கணக்குப் புத்தகத்தைத் தலைகீழாகப் பிடித்துக் கொண்டு பெரியா மனம்போலக் கிறுக்கித் தள்ளினன்!

பிணங்கள்! பிணங்கள்! இடுகாடு செழித்தது! சமதர்ம சங்கீதம் பிறந்திடக் கேட்கவா வேண்டும்? பெரியாவின் சரித்திரத் திருத்தங்களை ஸ்டாலின் இதய நிறைவோடு ஏற்றுக்கொண்டார். அந்த அடிப்படையில் இயக்க வரலாற்றை அவரே மாற்றி எழுதினர். இரும்பு மனிதனின் புகழ்ப்பல்லவி விதவிதமான முறையிலே பவனி வந்தது! 'லெனினும் ஸ்டாலினும்' என்ற புதிய சொற்கோவையே பிறந்தது! புகைப்படங்களும், புதிய சரிதமும் உலகெங்கும் விநியோகிக்கப்பட்டன!

இறுதி நாட்களில் லெனின் ஸ்டாலினை வெறுத்தார். இயக்கத்தின் செயற்குழுவினருக்கு அவரால் எழுதப்பட்ட இறுதி வாக்கு மூலத்தை ஸ்டாலின் கைப்பற்றிக் கொண்டார். அதுமட்டும் செயற்குழுவினரிடம் போயிருந்தால் வரலாறே மாறுதலடைந்திருக்கும். சமதர்மம் பேசும் புதிய சர்வாதிகாரி சோவியத்தில் பிறந்திருக்கவே மாட்டான்!

இது டாலர் ஏகாதிபத்திய அமெரிக்காவின் சரடு அல்ல; குருசெவ் திருவாய் மலர்ந்ததும் 'பிராவ்தா' தந்த சேதி!

கொள்ளைக்காரர்கள்
பாரசீகத்தின் கூலிகள்
ஐந்தாம் படையினர்
நச்சுப் பாம்புகள்

மக்கள் துரோகிகளை-ஸ்டாலினிஸ அமைப்பு ஏற்றுக்கொள்ளாதவர்களை பெரியா இப்படியெல்லாம் வர்ணித்திருந்தார். இதே குரல் இரண்டாவதாக சோவியத்திலே எழுந்தது! பேசியவர் மாலன்கோவ்; பலிப் பொருளானர் பெரியா. 'அந்நிய முதலாளித்துவத்தின் ஒற்றன்' என்ற குற்றச்சாட்டு பெரியாவின் முன்னே வீசியெறியப்பட்டது! ரகசிய விசாரணை-தீர்ப்பு, பெரியா 'கம்யூனிஸம்' செய்யப்பட்டார்!

மாலங்கோவின் உதடுகள் முணுமுணுத்தன:

'வலிமை பொருந்திய சோவியத் குடியரசிற்காக!'

பெரியா இரண்டாந்தரத் தொண்டரல்ல. தனி மனிதன் இயக்கத்தால் பெறும் மேன்மைகளை எல்லாம் அவர் பெற்றிருந்தார். ஸ்டாலினின் அடுத்த வாரிசாகக் கூட மிகப் பலரால் எண்ணப்பட்டு வந்தவர். அவர் அன்னிய முதலாளித்துவத்திற்குச் சோரம் போகும் அளவிற்குப் பழுதுபட்டிருந்த சோவியத்தின் சூழ்நிலையை நாம் எளிதாகத் தள்ளிவிடுவதற்கில்லை. தனிப்பட்டோரின் விருப்பு வெறுப்புகளுக்காக இயக்கத்தின் இலட்சியங்கள் கோணலாக்கப்பட்டன என்பதுதான் உண்மை. 'பிற்போக்குச் சக்திகளுக்கு அடிமையாகிப் போன துரோகிகளை அழிக்கிறேன்' என்று ஆர்ப்பரித்த பெரியாவே பிற்போக்குச் சக்திகளின் ஒற்றனாக எண்ணப்படும் அளவில் நிலையில் தெளிவு இல்லை என்பதுதான் பொருள்.

அடுத்துக் கெடுக்கும் பண்பு—இருட்டறை வாதங்கள்—பழிவாங்கும் வெறிக்குணம் இத்தனையும் தொழிலாளிவர்க்கத்தின் வலிமைமிக்க அரசியல் அமைப்பிற்குத் தேவைதானா? இதற்குத்தானா மேதை மார்க்ஸ் 'சித்த வைத்தியத்தை'த் தயாரித்துக் கொடுத்தான்? மாவீரன் லெனின் உழைத்ததும், மக்கள் சக்தி விரயமாக்கப்பட்டதும் இந்தச் சிவப்பு விளையாடலுக்குத்தானா? இத்தகு கேள்விகளை எழுப்புவோரை ஆதிபத்தியத்தின் கூலிகளாகத் தூற்றுவது எளிது. இட்லரும் முசோலினியும் வெட்கும் வண்ணம் அரசியல் பலிபீடங்களை உருவாக்கி வைத்துக் கொண்டு பொதுவுடைமை பேசுவதும், 'சமாதானம்' புலம்புவதும் செந்நாய் ரத்தம் உலராத நாக்கோடு ஜீவகாருண்யம் பேசுவதை விட விந்தை!

பெரியா கொலை செய்யப்பட்டது அதிசயமல்ல; சோவியத் அரசாட்சியில் ரகசியப் போலீஸ் அதிகாரிகளாயிருந்த ஒருவராவது 'உருப்படியாக'ச் செத்ததில்லை.

செயல்வீரர்களை துரோகிகளாக்கி பெரியா சரித்திரம் படைத்தார்; பெரியாவை அந்நிய சக்திகளின் ஒற்றனென மாலங்கோவ் வரலாறு எழுதினர். ஸ்டாலினை சர்வாதிகாரி என்று குருசெவ் துணிச்சலோடு சித்தரித்தார். ஹங்கேரி முற்றுகையை வைத்துக்கொண்டு நாளை வரும் தலைவன் குருசெவை ஆதிக்க வெறியராக்கிப் புதிய சரித்திரம் எழுதுவான்! குட்டிச்சாத்தான்கள் சேர்ந்து சரித்திரம் எழுதியது போல, ரஷ்ய வரலாறே சின்னபின்னமாகிவிட்டது! பதினைந்தாம் நூற்றாண்டைய டெல்லி முஸ்லிம்களின் ஆட்சியென 'சிம்மாதனப் படுகொலைகள்' இயக்கத்தின் வேலைத்திட்டங்களாகி விட்டன!

மார்க்ஸியத்தை எரித்த சாம்பலை வைத்துக்கொண்டு இப்போதைய கம்யூனிஸம் பேரம் பேசுகிறது!

இந்த வெறித்தனமான அமைப்பு புகழ்பெற்ற எழுத்தாளன் மாக்ஸிம் கார்க்கியைக்கூட நிம்மதியாக வாழவிடவில்லை. உலகம் அந்த ரகசியத்தை இப்போதுதான் உணர்கிறது.

சோவியத்தின் அரசியல் சித்தாந்தங்களுக்கு கார்க்கி கலை மெருகளித்தான். உலக இலக்கிய அரங்கிலே ரஷ்யாவிற்கு நிலையான புழழைத் தேடித் தந்தன. அவனது எழுத்துக்கள்! கார்க்கியின் உழைப்பு வெறும் காகிதப் போராட்டமல்ல. புரட்சியில் நேரடியாகக் கலந்துகொண்ட அவனை நாடு கண்ணின் மணியாகப் போற்றியதில் விந்தையில்லை. இலக்கியாசிரியன் என்ற நிலையில் டால்ஸ்டாயை கார்க்கி இதய நிறைவோடு வழிபட்டான்; அவரது சில கொள்கைகளை அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. டால்ஸ்டாய் ஆட்சியாளரையும் மாற்றுக் கருத்தினரையும் பாரபட்சமின்றி விமர்சனம் செய்தார். கார்க்கிக்கு இது எரிச்சலைத்தான் தந்தது. வேறு வேறு விதமான வாழ்வைக் கொண்டவர்கள் இருவரும். டால்ஸ்டாய் சீமான் குலக்கொழுந்து; இளமைக்காலம் அவருக்கு விருந்தாகத்தானிருந்தது சூதாட்டத்திலும் பெண்களின் சிரிப்பிலும் வாழ்வின் பெரும்பகுதியைக் கழித்துவிட்டு இறுதியிலே விரக்தி வேதாந்தம் பேசியவர்; கார்க்கியோ

— 7-ம் பக்கம் —

**சேற்றினை எடுத்தார் ஜீவா; சிங்காரம் செய்தார் ஆமாம்!**



# எண்ணம்

மலர் 3 || 16-2-57 || இதழ் 24

## "வாய்ச்சொல் வீரர்கள்!" "துரோகம் புரிந்தவர்கள்!" "கோயிலை இடிப்பவர்கள்!"

தமிழகத்தில் தொடங்கப் பெற்றிருக்கும் தேர்தல் பிரச்சாரங்களில் தி. மு. கழகம் ஒன்றுதான் தனக்கென அமைந்த முறையில் தேர்தல் பிரச்சாரங்களை நடத்தி வருகின்றது. ஆட்சியின் அவலத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது. காங்கிரஸ் கனவான்களின் கவனக் குறைவை எடுத்துரைக்கிறது. கல் நெஞ்சங்களைச் சுட்டிக் காட்டுகிறது. 'அதோ சுயநலமி! இதோ பாருங்கள் சூழ்ச்சிக்காரன்' என்று மெய்ப்பிக்கிறது. இதைப் போல் பிற கட்சிகள்-தேர்தலில் பங்கேற்றிருக்கும் கட்சிகள் நம் மீது குறை காண முடியவில்லை. சான்று காட்டிப் பேச இயலவில்லை. கீழ்த்தரமான முறையில் வசைபாடத் தொடங்கியிருக்கிறார்கள். காங்கிரஸ் இயக்கத்திலே இருக்கும் படித்தோர் கூட 'பயில்வான்'கள் பாணியில் பேசுகிறார்கள்.

தி. மு. கழகத்தவர்கள் வெறும் வாய்ப் பேச்சுக்காரர்கள், அவர்களால் சட்டசபைக்கு வந்து என்ன செய்ய முடியும்? என்கிறார் ஒரு காங்கிரஸ் பட்டதாரி.

தி. மு. கழகத்தவர்கள் வாய்ப் பேச்சில் வல்லவர்கள் என்று அவர்களே வாக்குமூலம் தந்திருக்கிறார்கள். அவர் தரும் இந்த மகுடத்தை மனமுவந்து ஏற்றுக் கொள்வோம். 'வாய்ப் பேச்சு வீரர்கள்'—!. ஆமாம் நாம் வாய்ப் பேச்சு வீரர்கள் தான். நாங்கள் சட்டசபைக்குள் போக விரும்புகிறோம். ஆனால் காங்கிரஸ்காரர்கள் வாய்ப் பேச்சுக்காரர்கள் சட்டசபைக்குப் போய் என்ன செய்யப் போகிறார்கள்? என்கிறார்கள். வேடிக்கையான கேள்வி இது! இந்தக் கேள்வியை ஆங்கிலத்தில் அச்சடித்து வெளிநாடுகளுக்கு அனுப்பினால் காங்கிரசைப் பற்றி ஊக்கத்தவர்கள் பிரமாதமாக மதிப்பார்கள். இந்தியாவில் சட்டசபைக்குப் போட்டியிடுவோர் மல்யுத்தம் தெரிந்தவர்களாகவும் சிலம்பாட்டம் தெரிந்தவர்களாகவும் இருக்கவேண்டும் போலிருக்கிறது என்றுதான் ஒவ்வொரு அன்னியனும் நினைப்பான்! வாய்ப் பேச்சுக்காரர்கள் சட்டசபைக்குப் போய் என்ன செய்வதாம்! சட்டசபைக்குப் போவதே பேசுவதற்காகத் தானே! சட்டசபையில் நடப்பதே பேச்சுக் கச்சேரி தானே! பிறகென்ன,

காமராசருக்கும் கோவிந்தசாமிக்கும் கத்திச் சண்டையா?

சி. சுப்ரமணியத்திற்கும் ஆத்தூர் சுப்ரமணியத்திற்கும் மல்யுத்தமா? இல்லையே? தயவு செய்து காங்கிரஸ்காரர்கள் புரிந்துகொள்ளவேண்டும், சட்டசபைக்குப் பேசத் தெரிந்தவர்கள்தான் போக வேண்டும்! ஆகவே, பேசத் தெரிந்தவர்கள் தி. மு க. தான் என்று காங்கிரஸ்காரர்களே சொல்லியிருக்கிறார்கள். வழிவிட்டு நிற்கட்டும் காங்கிரஸ்காரர்கள்! போய் வருகிறோம்! சட்டசபையில் என்ன நடக்கின்றது என்று ஒதுங்கியிருந்து பார்க்கட்டும் தேசீய நண்பர்கள். தி. மு. கழகத்தை எதிர்த்து நிற்கும் கம்யூனிஸ்டுத் தோழர்களுக்கும் நினைவுபடுத்துகிறோம். ஜீவானந்தம் பேசாததை, ராமமூர்த்தி கேட்காததை, கல்யாணசுந்தரம், மணலி கந்தசாமி கேட்காததை நாங்கள் கேட்போம்! ஏனென்றால் உங்கள் கருத்துப்படி நாங்களே பேசத் தெரிந்தவர்கள்! எங்களை அனுப்புங்கள்'! துணை புரிய வேண்டாம்! துரோகமாவது செய்யாதிருங்கள்!

குஸ்தி பயில்வான்கள் தான், குத்துச்சண்டைக்காரர்கள் தான், ரத்தத்தைச் சந்தனமாக மதிப்போர்தான் பொதுத் தேர்தலில் கலந்துகொள்ள முடியும் என்ற நிலை வரும்போது நாங்கள் நிச்சயமாக ஒதுங்கிக்கொள்வோம். நீங்களே போட்டியின்றி வரலாம்! தயவுசெய்து இப்போது எங்களுக்கு வழிவிடுங்கள்! மீதமிருக்கும் தமிழ் மக்களைக் காப்பாற்றிப் பார்க்கிறோம். தென்னாட்டைச் சுடுகாடாக்கு முன் எங்களிடம் ஒப்பித்து விடுங்கள்!

அடுத்தாற்போல் தி. மு. கழகத்தை துரோகிகள் கட்சி என்கிறார்கள். நாம் வெள்ளைக்காரனுக்கு உதவி செய்தோமாம்! படைக்கு ஆள்சேர்த்துவிட்டோமாம்! எதிரிகள் சொல்கிறார்கள்! உண்மைதான் என்றாலும் அதிலென்ன தவறு! ஜர்மானியர்களுக்கும் வெள்ளையர்களுக்கும் போர் நடந்து கொண்டிருந்தபோது நாம் வெள்ளையர்களுக்கு உதவி செய்துகொண்டிருந்தோம் என்றால், நாம் ஜர்மானிய இட்லர் தோற்கவேண்டும் என்றுதானே கருதியிருக்கிறோம்! காங்கிரஸ்காரர்கள் என்ன எண்ணினர்கள்? இட்லர் ஜெயிக்கட்டும்; இந்த நாட்டை சர்வாதிகாரியிடம் ஒப்படைப்போம் என்றுதானே எண்ணியிருக்கிறார்கள்! பொது மக்கள் எண்ணிப் பார்க்கட்டும் நாட்டுக்குத் தேவை இட்லர் ஆட்சியா? காங்கிரசார் கருத்துப்படி இட்லர் வெற்றி பெற்றிருந்தால் இந்த இந்தியத் துணைக்கண்டத்தில் இப்போது மூவர்ணக் கொடியைப் பார்த்திருக்க முடியுமா? அசோகச் சக்கரத்தை எண்ணியாவது இருக்க முடியுமா? வெள்ளையனுக்கு உதவிசெய்து இட்லரை முறியடித்து சர்வாதிகாரத்தை எதிர்த்துத் தோற்கடித்த தி. மு. க.வா துரோகிகள் கட்சி! அல்லது இட்லர் வெற்றி பெறட்டும் என்று வெள்ளைக்காரர்களுக்கு உதவி செய்யாது விட்ட காங்கிரஸ் கட்சி துரோகிகள் கட்சியா? எது துரோகிகள் கட்சி?

மூன்றாவதாகவும் கடைசியாகவும் தேசியத் தோழர்கள் நம் மீது சுமத்தும் குற்றச்சாட்டு, நாம் எம். எல். ஏ.க்களானால் கோயில்களை இடித்துவிடுவோம் என்பதுதான்! மக்களை மந்தைக் கூட்டமென எண்ணிக்கொண்டு தேசியத் தோழர்கள் இதையும் ஒரு தேர்தல் பிரச்சாரம என்று பேசித் தீர்க்கிறார்கள்!

பிள்ளையார் பொம்மையை உடைத்தது யார்?

'பெரியார்' ராமசாமி!

கிருஷ்ணன் பொம்மையை உடைத்தது யார்?

'பெரியார்' ராமசாமி!

ராமன் படத்தை எரித்தது யார்?

'பெரியார்' ராமசாமி!

அவரைத் தேடிப் போய்—இல்லை—அவராகத் தேடி வந்து பரிந்து பேசுவது யாருக்கு?

காங்கிரஸ் கட்சிக்கு!

அவர் முழுமூச்சாக எதிர்ப்பது யாரை!

'அண்ணாத்துரையின் தோல்வி எனக்கு வெற்றி' என்றல்லவா சொல்கிறார்?

மொத்தத்தில் என்ன புலனாகிறது? நாஸ்தீகத்தை வளர்க்கும் பெரியார் தான் காங்கிரசை வளர்க்கிறார். 'கோயிலை இடி, பூணூலை அறு, குடுமியை வெட்டு' என்று பேசும் பெரியார் காங்கிரஸ் கட்சியிலே இருக்கிறார் என்பதை வாக்காளர்கள் மறந்துவிடக் கூடாது. ★

### மாஸ்கோ பாதை...

—7-ம் பக்கத் தொடர்ச்சி—

பின்னாலே தள்ளிவிட்டு தந்திரக்காரர்கள் தலைமையைக் கைப்பற்றுவது அரசியல் வரலாற்றிலே சாதாரண சம்பவம். ட்ரோட்ஸ்கி கூட தன் சுயசரிதத்தில் ஸ்டாலின் முழுமுதல் தலைவனனது வழக்கமான நிகழ்ச்சி என்று வேதனையோடு குறிப்பிட்டிருக்கிறான்.

கர்கோபோல் முகாமில் தான் புரட்சித் தலைவன் ரெடாக் 1938-ல் வதைக்கப்பட்டான். இரண்டு வருடங்களில் இந்தப் பிரதேசம் விவசாயச் செழிப்புள்ள பகுதியாகிவிட்டது. அடிமைகளின் பிணங்களிலே சோஷியலிஸ சாதனை உருப்பெற்றது!

முதலாளித்துவ நாடுகள் கூட கிரிமினல் குற்றவாளிகள், அரசியல் கைதிகள் ஆகியோரின் புள்ளி விவரங்களை வெளியிடும்போது சோவியத் சொர்க்கபூமி 1929-லிருந்து அந்த நியதியை மறந்தே விட்டது! பொதுவுடைமைப் புரோகிதர்கள் 'குற்றவாளிகளே பிறக்காத நாடு' என்று சொன்னாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

1950-ல் அரசியல் கைதிகள் என்ற பெயரில் **இருபதினாயிரம் குற்றவாளிகளை** ரஷ்ய ஆட்சி பீடம் அங்கேரியிலிருந்து அழைத்துப் போயிற்று. 1949-ல் செக்கோஸ்லோவேக்கியாவில் 10,000 அடிமைகள் திரட்டப்பட்டனர். 1951-ல் ரஷ்ய ஆதிக்க நாடான பல்கேரியாவில் தொழிலாளர் முகாமிற்கான சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. 1945 மார்ச் 13-ந்தேதி பிரஷ்யாவிலிருந்து ரஷ்யா சென்ற வண்டிகளில் 22,000 ஜெர்மன் பெண்கள் இருந்தார்கள். போலந்தில் எட்டு தொழிலாளர் முகாம்களில் 75,000 அடிமைகள் உழைப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இது தவிர 'சோஷியலிஸ்ட் சொர்க்கத்தில்' மட்டும் 15,000,000 அடிமைகள் நிறைந்த முகாம்கள் இருப்பதாக சமதர்ம பூமியிலிருந்து தப்பி வந்தோரின் தகவலிலிருந்து தெரிகிறது. மக்கள் தொகையில் பெரும் பகுதியினரைக் குற்றவாளிகளாக—துரோகிகளாக மாற்றும் சமுதாய அமைப்பை 'கம்யூனிஸம்' என்ற பெயர் வைத்து அதன் மேன்மையையே அழித்து விட்டார்கள்!

'பழுதற்ற ஒரு மனித உருவம் மேன்மையான கொள்கைகளைவிட எத்தனையோ மடங்கு விலை மதிப்பற்றது' என்ற உண்மையை சோவியத் தலைவர்கள் உணரவில்லை. 'இப்போதைய சமுதாய அமைப்பின் சிரமமெல்லாம் மனதை வளர்க்க அல்ல. வயிற்றை வளர்க்கத்தான்!' என்று சொல்லிய கார்க்கி சாகடிக்கப்பட்டான்! 'நம்ம ஊர் கம்யூனிஸ்டுகளின்' சோறுதான் முக்கியம் என்ற வாதம் கூட மனித இயற்கையை மதிக்காத அடிப்படையில் எழுந்ததுதான்! குருபீடத்தின் செயலை சிஷ்யர்கள் எத்தனை அழகாகப் பின்பற்றுகிறார்கள்! நண்பர் ஜீவா பொதுக் கூட்டங்களில் ஆவேசமாகப் பேசும்போது அடிக்கடி 'சோற்றாலடித்த பிண்டங்கள்' என்ற 'விசேஷ வார்த்தையைக் குறிப்பிடுவார். அது 'சுயவிமர்சனம்' என்பது இப்போதுதான் தெரிகிறது.

"நம்முடைய சோவியத் சமதர்மக் குடியரசில் தென்னமெரிக்கா நீக்ரோக்களை விடத் தாழ்ந்த நிலையில் வாழ்ந்துவரும் அனேக லட்ச அடிமைகள் இருக்கிறார்கள்" என்கிறார் **ஸெர்ஜ்பிராக்கோ** எனும் புகழ்பெற்ற ரஷ்யப் பொருளாதார நிபுணர்.

மாஸ்கோவின் லட்சணம் இப்போது எல்லோருக்கும் புரிந்துவிட்டது. கிரெம்லினில் நிகழ்ந்த 'சரித்திர பாடபேதங்கள்' புதிய உண்மைகளை வழங்குகின்றன. 'ரஷ்யாவின் வெற்றிகளை வாதத்திற்காக ஏற்றுக்கொண்டாலும் அந்த வெற்றி, சர்வாதிகாரத்தின் வெற்றி; கொலை வெறியின் வெற்றி, சமதர்மத்தின் வெற்றியல்ல!

சோவியத் தலைவர்கள் குரோத எண்ணத்திற்கு விஞ்ஞான வர்ணம் பூசினர்கள்!

கொலைக் குணத்தைத் தத்துவ விளக்கமாக்கினர்கள்!

மனிதன் மிருக நிலைக்கு விரட்டப்பட்டான்! மாஸ்கோ பாதை ராஜவீதியல்ல: ரத்த வாடை அங்கே பெருமூச்சென்னும் புயலிலே கலந்திருக்கிறது! நல்ல லட்சியங்கள் கிழித்தெறியப்பட்டிருக்கின்றன! மண்டிய முட்புதரிலே கார்க்கியின் எலும்புக்கூடு சரிந்து கிடக்கிறது.

இழிவும் பழியும் நிரம்பிய பாதை. பிற்போக்குச் சக்தியை எதிர்த்துப் போராடியவர்கள், பிற்போக்குச் சக்தியாகவே மாறிவிட்ட பயங்கரப் பாதை. அதன் அதன் மகிமையை 'மணியடித்து'த் தெரிவிக்கும் போக்கினர் புற்றீசலெனப் புறப்பட்டிருக்கிறார்கள். இந்த நிலையிலே திராவிடத்திற்கு விழிப்பு மிக மிகத் தேவை. ★

# ★ தி. மு. கழக தேர்தல் அறிக்கை ★

**அன்பர்களே !**

திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றி ஏழு ஆண்டுகள் கழிந்த பிறகு, எட்டாவது ஆண்டு நடப்பில் முதன் முறையாகப் பொதுத் தேர்தலில் ஈடுபடுகிறது. இது, கழகத்தின் வரலாற்றில் மட்டுமின்றி, நாட்டின் அரசியல் வரலாற்றிலும் ஒரு முக்கியமான கட்டமாகும். கடந்த ஒன்பதாண்டுக் காலமாக ஆட்சியில் அமர்ந்துள்ள காங்கிரஸ் கட்சி, சட்டசபையிலும் மக்கள் சபையிலும் ஒரு வலுவான எதிர்க்கட்சி அமைந்து செயல்படமுடியாதவாறு தன்னிடம் கிடைத்துள்ள அதிகாரத்தின் துணைகொண்டு மெய்யான ஜனநாயக ஆட்சி ஏற்பட்வொட்டாமல் தடுத்து, எதேச்சாதிகாரமாக ஆண்டு வருகிறது. திராவிடத்தின் விடுதலை வேண்டி நிற்கும் கழகம், தேர்தலில் ஈடுபட்டு முழுப்பலன் காணமுடியாது என்ற கருத்தில் கடந்த தேர்தல்கள் அனைத்திலும் நேரிடைப் பங்கு கொள்ளாமலே இருந்து வந்தது. இது, காங்கிரசின் எதேச்சாதிகார எண்ணத்தை நிறைவேற்றப் பெரிதும் சாதகமாய் அமைந்தது. மேலும் கழகம், நாட்டு மக்களிடையே ஏற்படுத்திய விடுதலை வேட்கையுணர்ச்சியும் வடநாட்டு ஏகாதிபத்திய எதிர்ப்புணர்ச்சியும் தேர்தல் நேரத்தில் காங்கிரசை எதிர்த்துப் போட்டியிட்ட பல சுயநல சுயேச்சைகளுக்கு வெற்றியைத் தேடித் தந்தன. வெற்றி பெற்றபின், அந்தச் சுயேச்சைகளை மிக மலிவாகக் காங்கிரஸ் தன் அணிக்கு இழுத்துக்கொள்வது எளிதாக அமைந்தது. இந்நிலை, காங்கிரசை எவரும் எப்போதும் எதிர்க்கவே முடியாது என்ற எண்ணத்தையும், அந்தக் கட்சியின் ஆட்சியேதான் என்றும் நிலைத்திருக்குமோ என்ற அச்சத்தையும் பெரும்பாலான மக்களுக்கு ஊட்டியது. இந்த அச்சம் நாளடைவில் மெய்யான ஜனநாயகம் உருவாவதற்குப் பெருந்தடையாக இருக்குமே என்ற கவலையில், கழகம் தேர்தலில் ஈடுபடுவது என்ற முடிவினை மேற்கொண்டு, இதுவரை தான் இயங்கிவந்த நிலையில் ஒரு மாற்றத்தைக் கண்டுள்ளது.

**சுயநிர்ணய உரிமை வேண்டும்**

இந்திய அரசியல் சட்டம் உரிமை வழங்கும் சாசனமாக அமையாமல், பெரிதும் உரிமையை மறுத்து வடநாட்டு ஏகாதிபத்தியத்திற்கு அரண் செய்யும் சட்டத் தொகுப்பாக உள்ளது. இந்திய யூனியனில் பிணைக்கப்பட்டிருக்கும் எந்த மாநிலமும் வெள்ளையர் வெளியேறிய போது, இந்திய யூனியன் என்னும் அமைப்பில் இணைவதற்கான விருப்பு வெறுப்பைத் தெரிவித்துக் கொள்ள வாய்ப்பே பெறவில்லை. அடுத்து, யூனியன் அமைப்பிலிருந்து ஏதாவதொரு மாநிலம் பிரிந்து செல்ல விரும்பினால், பிரிந்து செல்லும் உரிமை மறுக்கப்பட்டுள்ளது. ஏனைய மாநிலங்களைச் சேர்ந்தவர்களும் சம்மதித்தால்தான் பிரிந்து செல்லமுடியும் என்ற விதியினை அரசியல் அமைப்பு ஏற்படுத்திக் கொண்டுள்ளது. எனவே, அரசியல் அமைப்பில் செய்யப்படவேண்டிய முதல் மாற்றம், ஏந்த ஒரு மாநிலமும் எப்போது வேண்டுமானாலும் இந்திய யூனியனிலிருந்து பிரிந்து சென்று தனித்து இயங்கும் உரிமையை தானே, பெற்றிருக்க வழி செய்வதுதான்.

**அரசியல் சமத்துவம் வேண்டும்**

அடுத்து, இன்று இந்திய யூனியனில் மாநிலங்கள், மக்கள் எண்ணிக்கை அடிப்படையில் பிரிக்கப்படாமல், பெரும்பாலும் மொழி, கலாச்சார அடிப்படையிலேயே பிரிக்கப்பட்டுள்ளன. ஆனால், மக்கள் சபையில் பிரதிநிதித்துவம் மக்கள் எண்ணிக்கை அடிப்படையில் வகுக்கப்பட்டுள்ளது. இந்த அநீதியின் விளைவாகப் பெரிய மாநிலங்களாக விளங்கக்கூடிய வகையில் எண்ணிக்கையில் பெருத்துள்ள சில இனத்தவர், சிறிய மாநிலங்களாக அமைந்துள்ள வேறு இனத்தவர் மீது ஆதிக்கம் செலுத்த இட மேற்படுகிறது. நடைமுறையும் அப்படியே உள்ளது. அரசியல் சமத்துவம் இல்லாத ஆட்சியில் ஒரு சாரார் ஆதிக்கக்காரர்களாயும் பிறிதொரு சாரார் அடிமைகளாயும் தான் இருக்கமுடியுமே தவிர, எல்லா மக்களும் சுதந்திரமும் சமத்துவமும் பெற்றவர்களாக இருக்கமுடியாது. எனவே, மாநிலங்கள் ஒவ்வொன்றுக்கும், பெரியதோ சிறியதோ, ஒரே அளவு பிரதிநிதித்துவ உரிமை அளிக்கப்படுதல் வேண்டும்.

**மத்திய ஆட்சி அதிகாரங்களுக்கு வரம்பு வேண்டும்**

அடுத்து, இன்றைய அமைப்பில் அதிகாரங்களும் வருவாய்களும் மத்திய ஆட்சிக்கே பெரிதும் அளிக்கப்பட்டுள்ளன. மாநில ஆட்சியில் வருவாய் பெருக வழியின்றியும் சாதாரணப் பிரச்சினைகளில்கூட முடிவெடுக்க முடியாமலும் உரிமைகள் மறுக்கப்பட்டுள்ளன. இந்நிலையில், மாநிலங்களின் அதிகார வரம்பும் வரி விதிப்பு உரிமைகளும் வெகுவாக அதிகரித்து மத்திய ஆட்சியின் அதிகாரங்களுக்கும் வரி விதிப்பு உரிமைகளுக்கும் வரம்பு கட்டப்படுதல் வேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகம் கருதுகிறது.

**தொழில் தேசியமயமாக வேண்டும்**

தொழில் துறையில் இன்று நிலவும் தனியார் ஆதிக்கம் நாட்டு மக்கள் அனைவருடைய நலன்களுக்கும் நல்வாழ்வுக்கும் பெருங்கேடாக அமைந்துள்ளது. உற்பத்திச் சாதனங்கள் அனைத்தும் தேசியமயமாக்கப்படும் அந்த நாள்தான், நாட்டு மக்களின் துயர்துடைக்கும் நாளாக அமையும் எனக் கழகம் கருதுகிறது. இந்த இலட்சியத்தை நிறைவேற்ற வாயளவோடன்றி மனப்பூர்வமாகப் பாடுபடும் அரசே மக்கள் நல அரசாகத் திகழ முடியும். ஐரோப்பா, அமெரிக்கா போன்று, பெரும் அளவில் தொழில் மயமாகாத இன்றைய நிலையில், இந்த இலட்சியத்தை நிறைவேற்றுவது மிகவும் எளிதாகும். தனியார் இன்னும் பிரவேசிக்காத தொழில் துறைகள் ஏராளமாக உள்ளன. அந்தத் துறைகளில் அரசு உடனடியாகக் கவனம் செலுத்துவதும் கூடவே படிப்படியாக ஏற்கனவே உள்ள துறைகளையும் தேசியமயமாக்குவதும் இலட்சிய வெற்றியைக் கொடுக்கும். அத்துடன், அன்னிய முதலாளிகளின் இலாபத்தை உயர்ந்தபட்சம் கட்டுப்படுத்தி, அதை இந்நாட்டிலேயே பரவலாக முதலீடு செய்ய முழுமூச்சுடன் முயற்சிக்கப்படும்.

**ஐந்தாண்டுத் திட்ட அநீதி ஒழியவேண்டும்**

இந்தியாவின் அபிவிருத்திக்கென்று மத்திய சர்க்கார் தீட்டியுள்ள ஐந்தாண்டுத் திட்டங்கள் பெரிதும் வடநாட்டின் வளத்தைப் பெருக்கவும் வடவரின் வாழ்வு ஒன்றினையே நோக்கமாகக் கொண்டும் தீட்டப்பட்டுள்ளன எனக் கழகம் கருதுகிறது. இத்திட்டங்களின்மூலம் நீர்ப்பாசன, மின்சார உற்பத்தி ஆகிய துறைகளில் மிகப் பெரும்பாலான திட்டங்கள் வடநாட்டிலேயே இடம் பெற்றுவிட்டன. மற்றும், அரசே தொடங்கும் பெரும் கனரகத் தொழில்களும் தனியார் வசமுள்ள பெருந்தொழில்களுக்கான உதவியும் ஊக்கமும் வடவருக்கே வழங்கப்பட்டுள்ளன. திராவிடம் முழுக்க முழுக்கப் புறக்கணிக்கப்பட்டுள்ளது என்பதை, எவரும் இனி மறுக்கவோ மறைக்கவோ இயலாது. எடுத்துக்காட்டாக, சேலம் பகுதிகளில் வளமான இரும்புக் கனிகள் மிகுந்து இருந்தும், இரும்பு, உருக்குத் தொழில்கள் தெற்கே உறுதியாகத் தொடங்கக்கூடாது என்ற எண்ணத்தையே டில்லிப் பீடம் செயல்படுத்தி வருகிறது. சேலம் பகுதிகளில் 'பாக்சைட்' என்னும் கனிப்பொருளும் மிகுதியாகக் கிடைக்கிறது. இவ்வாறு பெரும் கனரகத் தொழில்களுக்கான வளங்கள் ஐயப்பாட்டிற்கு இடமில்லாத வகையில் பெருகி இருந்தும், இவைகளை அடிப்படையாக வைத்துத் தொழில் திட்டங்கள் வகுக்காமலிருக்கும் போக்கில் ஏற்படும் பெரும் மாற்றம் ஒன்றேதான், தென்னாட்டவரின் பொருளாதாரத்தை வளப்படுத்தும்.

நெய்வேலித் திட்டம் போன்ற ஓரிரு உருப்படியான திட்டங்கள் கூட மத்திய நிர்வாகத்தில் உரிய வேகத்தில் வளராமல், ஆமை வேகத்தில் நகர்ந்து காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கின்றன. திட்டங்களை நிறைவேற்றும் முழுப் பொறுப்பையும் அந்தந்த மாநில ஆட்சிகளே ஏற்று நடத்தினால்தான், திட்டங்கள் ஒழுங்குற, உரியகாலத்தில் நிறைவேறி, மக்களுக்குப் பயன் தரத் தொடங்கும்.

**அதிகபட்ச ஊதியத்திற்கு வரம்பு**

குறைந்தபட்ச ஊதியம் மாதம் ஒன்றுக்கு ரூபாய் நூறும், அதிகபட்ச ஊதியத்திற்கும் குறைந்தபட்ச ஊதியத்திற்குமிடையே உள்ள விகிதம் பன்னிரண்டு மடங்கு எனவும் அமையும் சமுதாயத்தைக் காண்பதற்கான வகையில் திட்டங்களைத் தீட்டவேண்டும். நாடு முழுவதும் தொழில் மயமாக்குவதற்கு முயன்றாலொழிய முன்னேற்றத்திற்கு வேறு வழியில்லை. நாட்டின் ஒரு பகுதி புறக்கணிக்கப்பட்டு, ஒரு பகுதியில் மட்டும் முன்னேற்றம் ஏற்பட்டால் இது சாத்தியமாகாது. வேலையில்லாத் திண்டாட்டமும் ஒரு பகுதியில் குறைந்து, மற்றொரு பகுதியில் பயங்கரமாகப் பெருகியும் தான் காணப்படும்.

**நிலச் சீர்திருத்தம்**

காங்கிரஸ் ஆட்சி தயங்கித் தயங்கிக் கொண்டுவரும் பல்வேறு நிலச் சட்டங்களும் சமூகத்தில் நிலவும் நல்லுறவுகளைச் கெடுத்துப் புதிய குழப்பங்களை ஏற்படுத்தவே துணைபுரிந்துள்ளன. நில உடைமைக்கு வரம்புகட்டும் சட்டத்தைத் துணிந்தும் திட்டவட்டமாகவும் நிறைவேற்றுவதொன்றே, குழப்பங்கள் நீங்கவும் உணவு உற்பத்தி பெருகவும், சமூக நீதி நிலைநாட்டப்படவும் உதவும்.

**விவசாய முன்னேற்றம்**

அடுத்து, விவசாயத் துறையில் கூட்டுறவு இயக்கம் மிக அதிகமான அளவில் விரிவடைய வேண்டும். கால்நடைப் பண்ணை, பால்பண்ணை கோழிப்பண்ணை, விற்பனைச் சங்கங்கள் ஆகிய துறைகளிலும் கடன் உதவி தருவதிலும் கூட்டுறவு இயக்கம் பெருமளவில் பரவிப் பணிபுரிந்தால், நடுமனிதர்களின் கொள்ளை இலாபக் கொடுமைகளிலிருந்து உழவர்கள் விடுபட்டு உழைப்பின் முழுப் பலனையும் பெற்று உணவு உற்பத்தியில் நல்ல உற்சாகம் காட்டுவர்.

**மீன் உற்பத்தி**

நம்மாநிலத்தில் பரந்த கடல் சூழ்ந்திருந்தும், மீன் பிடிக்கும் தொழில் இன்னும் புராதன முறைகளிலேயே நடைபெற்று வருகிறது. மீன்பிடிக்கும் மோட்டார் படகுகளும் வேறு வகையான நூதனக் கருவிகளும் இத்துறையில் புகுத்தப்பட்டால், மீனவர் வாழ்வு மலர்வது மட்டுமேயன்றி நாட்டு மக்கள் அனைவர்க்கும் மலிவாகவும் ஏராளமாகவும் மீன் கிடைக்கும். சத்தான உணவுப் பொருளான மீன் ஏராளமாகக் கிடைக்கச் செய்ய இதுவே வழியாகும்.





**கல்வி**

அனைவருக்கும் பத்தாவது வகுப்பு வரை (செகண்டரி கட்டம்வரை) இலவசக் கல்வியை அளிப்பதென்பது நமது நாட்டின் கல்வி வளர்ச்சியில் மிக முக்கியமானதொரு கட்டமாகும். விரும்பினால், இதை நிறைவேற்ற மார்க்கம் உண்டு காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்காகவே உருவாக்கப்பட்ட பல பயனற்ற திட்டங்களுக்காக ஆண்டுதோறும் கோடிக்கணக்கான ரூபாய்கள் விரையமாகிக்கொண்டு வருகின்றன. போலீஸ் இலாகாவில், ஊழியர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு ஒரு முயற்சியும் இல்லாவிட்டாலும் மந்திரிகளின் பாதுகாப்புக்கும் ஆர்ப்பாட்ட ஆரவார அலங்காரங்களுக்கும்போலீஸ் இலாகாவின் பெயரால் பல கோடி ரூபாய்கள் விரையமாகிக்கொண்டு வருகின்றன. இதுபோன்று விரையமாகும் பொருளை வைத்துக் கொண்டு பத்தாவது வகுப்புவரை இலவசக் கல்வி அனைவர்க்கும் அளிக்கமுடியும்.

அடுத்து, கட்சி, அரசியல், மத, வகுப்பு உணர்ச்சிகள் திணிக்கப்படாததும் அறிவு வளர்ச்சி ஒன்றையே நோக்கமாகக் கொண்டதுமான கல்விதான் மெய்யான பயன்படும் கல்வியாகும். பெண்கள், சிறு குழந்தைகள், ஊமைகள், செவிடர்கள், குருடர்கள் ஆகியோருக்கும் அவரவர்களுக்குரிய முறையில் கல்வி அளிக்கும் வசதிகள் விரிவாக்கப்பட வேண்டும். விஞ்ஞான, தொழில் நுணுக்கக் கல்வி நிலையங்கள் தேவைக்கேற்பப் பெருகவேண்டும்.

**தாய் மொழியில் போதனை**

கல்வி பலகட்டங்களிலும் தாய் மொழியிலேயே அளிக்கப்படல் வேண்டும். கல்விப் பணிபுரியும் ஆசிரியர்களின் – அதிலும் ஆரம்ப ஆசிரியர்களின் நிலை உயர்த்தப்படாமல் கல்வியின் தரம் உயருமென்று எதிர்பார்ப்பது வெறும் பகற்கனவே ஆகும்.

**இந்தித் திணிப்பு**

கல்வித்துறையில் இந்தி மொழி வெறி புகுந்து அட்டகாசம் புரிந்து கொண்டிருக்கிறது. உலகத் தொடர்புக்கும், விஞ்ஞான, தொழில் நுணுக்க, தத்துவ, வரலாற்றுப் பொருளாதார அறிவு பெறவும் ஆங்கிலம் இன்றியமையாததொன்று. ஆங்கில மொழி பயிற்றுவிப்பதில் அதிகக் கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும். தாய்மொழி அறிவு மிகுந்து விளங்க அதற்கு உரிய இடம் ஒதுக்கப்படல்வேண்டும்.

மற்றப்படி, இந்தித் திணிப்பு ஒரு சாராரின் அரசியல் ஆதிக்க வெறியினையே பிரதிபலிக்கிறது. அதற்கு இடமளிப்பது பெருந்தீமை பயக்கும். திராவிட மக்களின் மொழி, கலை, நாகரிகம், வரலாறு ஆகிய் துறைகளில் ஆராய்ச்சி நடத்தி, உண்மை நிலைகளைத் துலக்குவதற்கென்றே ஒரு தனித் திராவிட ஆராய்ச்சிப் பல்கலைக் கழகம் தோற்றுவிக்கப்பட வேண்டும்.

**சமவேலைக்குச் சம ஊதியம்**

மற்றும், அரசின் நிர்வாகத்தில் பணிபுரிவோர்களிடையே இன்று பெரும் அநீதி ஒன்று நிலவுகிறது. ஒரே பணியில் இருப்பினும் மத்திய அரசில் பணிபுரிவோர்க்கு ஓரளவு ஊதியமும் மாநில அரசில் பணிபுரிவோர்க்கு மிகக் குறைந்த ஊதியமும் அளிக்கப்படும் அநீதி ஒழிக்கப்பட்டு, ஒரே பணிபுரிவோர்க்கு, எந்த அரசிலாயினும், நிம்மதியான வாழ்க்கை நடத்துவதற்கேற்ற ஒரே அளவு ஊதியம் அளிக்கப்படுதல் வேண்டும்.

**அடிப்படைச் சம்பளமாக்க வேண்டும்**

ஏதோ நெருக்கடியான சில நேரங்களில் மட்டுமேதான் பஞ்சப்படி தருவது முறை. யுத்த காலத்தில் விலைவாசிகள் திடீரென உயர்ந்ததால் பஞ்சப்படி தரப்பட்டது. யுத்தம் முடிந்து பன்னிரண்டு ஆண்டுகளாகியும் விலைவாசிகள் இறங்கவில்லை. இந்த நிலையில் இன்னும் பஞ்சப்படி தரும் முறை வெறும் கேலிக்கூத்தாகவே உள்ளது. எனவே, பஞ்சப்படி என்பதை சம்பளத்தோடு சேர்த்து, முழுவதையும் அடிப்படைச் சம்பளமாகவே பாவித்து அளிப்பதே முறையாகும்.

**கிராம ஊழியர்**

கிராம உத்தியோகஸ்தர்களுக்கு ஒருபுறம் ஏராளமான பொறுப்புகளும் வேலைகளும் நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டிருப்பதும், மற்றொருபுறம் அவைகளை ஒழுங்குற நிறைவேற்ற வசதிகளும் உரிய ஊதியமும் தரப்படாத நிலை நிலவுவதும் அநீதி என்பதோடன்றி, நாட்டிற்குப் பல்வேறு வகையான இழப்புக்களும் நேரிடுகின்றன. கிராம உத்தியோகஸ்தர்களின் நிலை தெளிவாக்கப்படுவதுடன், வேலைகளுக்கும் பொறுப்புகளுக்கும் ஏற்ற ஊதியமும் வசதியும் அளித்தல் அவசியமாகிறது.

**கடல் கடந்த தமிழர்கள்**

இலங்கை, பர்மா, மலாயா போன்ற நாடுகளில் பிழைக்கச் சென்றுள்ள தமிழ் மக்களுள், அந்தந்த நாடுகளில் குடிமக்களாகப் பதிவு செய்து கொண்டவர்கள் நீங்கலாக, தாய்நாடு திரும்ப விரும்பும் மற்ற அனைவரையும் அழைத்து, அவர்களுக்கான வாழ்க்கைப் பாதுகாப்பைத் தேடித்தர வேண்டும். தமிழர்கள் நிறைந்துள்ள வெளிநாடுகளில் தமிழர்களே தூதுவர்களாக நியமிக்கப்படுதல் வேண்டும்.

**இராணுவச் செலவு வெட்டப்பட வேண்டும்**

இராணுவத்திற்கென்று இந்திய அரசு, தனது வருவாயில் பாதிக்கும் மேலாகப் பொருளைச் செலவிடுவது தேவையற்றதாகும். இராணுவச் செலவைக் குறைத்து, அந்தப் பொருளை இதர அபிவிருத்தித் திட்டங்களுக்குச் செலவிடுவதே முறையாகும்.

**தொழிலாளர்**

தொழிலாளர்கள் நீதியும் நிம்மதியும் பெறவேண்டும் என்பதுதான் கழகத்தின் நோக்கம். 'சக்திக்கு ஏற்றபடி உழைப்பு, தேவைக்கு ஏற்றபடி வசதி' என்ற நிலைமை ஏற்படவேண்டும். தொழிலாளருக்குக் குடியிருப்பு வசதி, வைத்திய வசதி, ஓய்வுநேர வசதி ஆகியவை போதுமான அளவுக்கு எல்லாத் துறைகளிலும் ஏற்படவேண்டும். கடந்த பத்தாண்டுக் கால ஆட்சியிலே தென்னாட்டு மக்களுக்கு நிம்மதியான வாழ்வளிக்கத் தவறியிருக்கும் காங்கிரஸ் ஆட்சியினர், தென்னாட்டுத் தொழிலாளரின் அடிப்படைத் தேவைகளைக் கூட நிறைவு செய்யக்கூடிய உத்தரவாதம் அளிக்கவில்லை. அடுத்தடுத்துப் போடும் ஐந்தாண்டுத் திட்டங்களிலே வடநாட்டுத் தொழிலாளரின் வளர்ச்சியும் பாதுகாப்பும் வளர்கின்ற அளவுக்குத் தென்னாட்டுத் தொழிலாளரின் நிலை முன்னேறவில்லை. இந்த அநீதியை வன்மையாகக் கண்டிப்பதுடன், தென்னாட்டுத் தொழிலாளரின் நிலை உயர ஆவன செய்யவும் தன்னால் முடியும் என்று உத்தரவாதமளிக்கிறது. இலாபத்தில் பங்கு கோருவதென்பது தொழிலாளர் உரிமைகளின் ஒரு கூறுமட்டுமே ஒழிய, முழு உரிமையையும் எடுத்துக் கொள்வதாகி விடாது. ஆகவே, தொழிற்சாலையின் அடிப்படை மூலதனத்திலும் நிர்வாகத்திலும் தொழிலாளரின் உரிமைப் பயணம் தொடங்க முயற்சி மேற்கொள்ளப்படும்.

**கைத்தறிக்குப் பாதுகாப்பு**

தென்னாட்டில் கைத்தறித் தொழிலை மேற்கொண்டு, வாழ்ந்து வரும் இலட்சக்கணக்கான கைத்தறி நெசவாளருக்குத் தக்க பாதுகாப்புத் தேடித்தர வேண்டியது அவசியமாகும். கரை போட்ட வேட்டிகளையும் சேலைகளையும் கைத்தறிக்கே ஒதுக்கிக் கொடுத்தால் தான் கைத்தறியாளரின் அவதி நீங்க வழிபிறக்கும். ஏற்றுமதியை அதிகரிக்கத் தேவையான வழிகளையெல்லாம் அரசாங்கம் ஆராய வேண்டும். இப்பொழுதுள்ள சூழ்நிலையில் விசைத்தறியைப் புகுத்துவது தனிப்பட்ட சில முதலாளிகளை வளர்ப்பதற்கும், ஏழை நெசவாளர்களைச் சீரழிப்பதற்கும் காரணமாக இருக்குமாதலால் விசைத்தறி இப்பொழுது எவ்வகையிலும் புகுத்தப்படக்கூடாது.

**விற்பனை வரி**

வியாபாரத் துறையில் நாணயமும் நேர்மையும், உண்மையும் மானமும் காப்பாற்ற முடியாத அளவுக்குப் பலகட்ட விற்பனை வரிகளும், அவை பற்றிய சட்ட விதிகளும் வியாபாரிகளைப் பெரிதும் வருத்தி வருகின்றன. வியாபாரிகள் நேர்மையாக வியாபாரம் நடத்த, அரசாங்கத்தின் தேவையற்ற கட்டுப்பாட்டு விதிகள் அகற்றப்பட வேண்டும். விற்பனை வரிகளைப் பல கட்டங்களில் வசூலிப்பதை விட ஒருமுனையில் விதித்து, வியாபாரிகளும், பொதுமக்களும் தாங்கக்கூடிய விதத்தில் வசூலிப்பதே ஏற்றது.

**ராஜா கலை மன்றம்**

கடந்த 30-1-57 அன்று தோழர் தமிழ்ப்பித்தன் தலைமையில் ராயப்பேட்டை அய்யம்பெருமாள் முதலி தெரு 11-ம் நெம்பர் இல்லத்தில் ராஜா கலை மன்றத்தின் ஆரம்ப விழா நடைபெற்றது. மேற்படி மன்றம், உலகம் படும் பாடு, மீண்ட சாம்ராஜ்யம், நண்பன் ராஜா ஆகிய மூன்று நாடகங்களை அரங்கேற்ற முடிவு செய்துள்ளது. ஒத்திகையும் வேகமாக நடைபெற்று வருகிறது.

**தமிழ்நாடு**

தேவிகுளம், பீர்மேடு, திருத்தணி போன்ற தமிழ்ப்பகுதிகள் தமிழகத்துடன் இணைக்கப்படுவதற்கும், சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ்நாடு' எனப் பெயரிடப்படுவதற்கும் முயற்சிக்கப்படும். இருமொழி, மும்மொழி, மாநில அமைப்பு ஏற்பாட்டினை எதிர்த்துப் போராடும்.

**தென்னாட்டில் பூதத்துவ ஆராய்ச்சி**

தெற்கே, உருவான வகையில் பூதத்துவ ஆராய்ச்சியினை அரசு மனப்பூர்வமாக மேற்கொண்டால், புதிய பல வளங்கள் தட்டுப்படும்; தொழில்களுக்கான வாய்ப்புகளும் பெருகும்.

**வேண்டுகோள்**

மேற்கண்டவைகளுக்காகக் கழகம் பாடுபடுவதுடன், சமுதாயத்தில் நிலவும் சாதிமுறைக் கேடுகளை ஒழித்துச் சாதிகளற்ற ஒரு சமுதாயத்தைக் காண்பதற்கும், திராவிட நாட்டின் அரசியல் சுதந்திரத்தை உருவாக்கவும், சமதர்மக் குடியரசைக் காணவும் தொடர்ந்து போராடக் கழகம் உறுதிபூண்டுள்ளது.

இன்றைய தென்னகத்தின் அரசியல் சூழ்நிலையில், திராவிட முன்னேற்றக் கழகம், தமிழ் (சென்னை) மாநில ஆட்சி மன்றத்தில் ஒரு வலுவுள்ள எதிர்க்கட்சியாக அமர்வதற்கேற்ற தகுதியும் திறமையும், வாய்ப்பும் வசதியும் பெற்றிருக்கிறது. கழகத்தைச் சேர்ந்த அறிவும் ஆற்றலும், நாணயமும் நேர்மையும், உண்மையும் உறுதியும், நாட்டின் நலன்கள் குறித்து வாதிடும் வல்லமையும், தேவைகளை வற்புறுத்திக் கேட்கும் தன்மையும் பெற்ற செயல் வீரர்கள் பலர் பல்வேறு தொகுதிகளிலும் போட்டியிடுகிறார்கள். நாடு வாழவும் நலிவு போகவும், உண்மையான மக்களாட்சி மலரவும் சமதர்மம் தழைக்கவும், திராவிட முன்னேற்றக் கழக அபேட்சகர்களை ஆதரித்து, அவர்களைச் சட்டமன்றத்திற்கும் மக்கள் சபைக்கும் அனுப்பிவைக்குமாறு, வாக்காளர்களே, உங்கள் அனைவரையும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறோம்.

'அறிவகம்' தலைமைக் கழகம்
சென்னை-13. (தி. மு. க.)

# தி. மு. கழக அபேட்சகர்களுக்கே வாக்களியுங்கள்!

## கம்யூனிஸ்டுக்...

— 1ம் பக்கத் தொடர்ச்சி —

தர்றேன்னு சொல்லி, தனிக்கோடியோட மனசை மாத்திப்பிட்டாங்கடி...! அடுத்த திங்கக்கிழமை முகூர்த்தம்!"–நல்லமுத்துப் பாட்டி தீட்டி நெளித்துக் கூறிய இச்செய்தியைக் கேட்டதும் என் தாய் அசந்துபோய் நின்றாள்.

"அடப் பழிகார உலகமே! உனக்கு ஏழைகளின் இன்பத்திலே ஏனிந்தச் சூதுமதி? பத்தாண்டுகளுக்குப் பிறகு கிட்டவிருந்த இந்த அற்ப சந்தோஷத்தையும் பறித்துக்கொள்ளுவதில் உனக்கென்ன லாபம்? ஏமாற்றம், ஏக்கம், இல்லாமை—இவ்வண்ணக் குளம்புகளால் கண்ணீர் என்னும் தூரிகையைக் கொண்டு தீட்டப்படும் சித்திரம் ஏழையாகத்தானா இருக்கவேண்டும்?

"வெண்ணெய் திரண்டு வரும்பொழுது தாழியை உடைத்தாற்போல், "வாழ்வு...வாழ்வு" என ஏங்கித் தவித்த என் ஒரே ஒரு பெண்ணை வாழ்விக்கப்போகும்போது ஏன் இப்படிக் குறுக்கே பாய்ந்து குந்தகம் விளைவிக்கிறாய்? திமிர்ச்செருக்கால் மதிகெட்டு மணமகனை விலைபேசும் மமதையாளர்களே! அந்த மானங்கெட்ட ஒப்பந்தத்திற்கு உடந்தையாகி பின் வாழ்நாள் முழுதும் ஒப்பாரி வைத்தழும் உதவாக்கரைகளே! நீங்கள் சமூகத் துரோகிகள்! நச்சுள்ள நல்லபாம்புகள்"—இது என் தாயின் உள்ளமென்னும் வில்லிலிருந்து தெறித்த சொல்லம்புகள்!

ஏழைகள் ஏமாற்றத்திற்கு இரையாகும்பொழுது எதுவும் பேசமுடியாத ஊமைகளாகின்றனர். ஆனால், அவர்கள் உள்ளக் குமுறலோ எரிமலையினுங் கொடியது.

தனிக்கோடி, இரும்புக்கடை இருளப்பரின் மருமகனானார். நேற்றுவரை தெருவில் துருப்பிடித்துக் கிடந்த இரும்பு, கொல்லர் உலைக்களத்திற்கு எப்படியோ கொண்டு செல்லப்பட்டது.

"அமராவதி அதிர்ஷ்டக்காரி! போன மாதம் பூத்தாள்! இம்மாதம் புதுமணம் பரப்புகிறாள், தனிக்கோடியோடு! அஞ்சலையின் பெண் அஞ்சுகம் பஞ்சை! அதோடு செவ்வாய் தோஷமாம்! அதனால்தான் ருதுவாகி பத்து வருஷமாய் ஒரு பயல்கூடச் சீண்டவில்லை!"

—ஊறுகாய் ஜாடிக்கு மூடி போட்டு விடலாம். ஊர் வாய்க்கு மூடி எங்கே போய்த் தேடுவது? எள்ளி நகையாடுவதற்கு ஏற்ற சத்துப் பொருள் 'ஏழை' போலும்!—என்று என்னை நானே தேற்றிக்கொண்டேன்.

நமது சமூகத்தில் நிதிக்குத் தரப்படும் மரியாதை கூட மதிக்குத் தரப்படுவதில்லை. நிதிக்கும் மதிக்கும் கொடுக்கப்படும் மரியாதையைவிட விதிக்கு வழங்கப்படும் மதிப்பு அதிகம்.

நான் செம்மாதுலையாம்! தேடுவாரற்றுக் கிடப்பது என் தலைவிதியாம்! எங்கள் ஊரில் என்னை இகழாதாரும், புகழாதாருமில்லை. எனக்கு வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றியது. வெறுப்பு இருவகைப்படும். விரும்பியதைப் பெறமுடியாதபோது பிறக்கும் வெறுப்பு ஒருவகை. விரும்பியதைப் பெற்று அதை அளவுமீறி உண்டு, அதனால் தோன்றும் வெறுப்பு இன்னொருவகை. முதல்வகை வெறுப்பு பரிதாபத்திற்குப் பாத்திரமாகக் கூடியது. இரண்டாம் வகை வெறுப்பு கண்டனத்திற்குரியது. எனக்கு ஏற்பட்ட வெறுப்பு முதல்வகை.

"தரித்திரம் பிடித்த சடலம்! எங்கிருந்தோ வந்து எனக்குன்னு பிறந்திருக்குது! செத்தாவது தொலையேன்!"–பொறுமையின் இருப்பிடமான என் தாய் வறுமையின் காரணமாய் வீசிய கடுமொழிகள்!

வெந்து நொந்துபோன என்னுள்ளத்திற்கு இதுகாறும் தணியாத அன்பு செலுத்தி வந்த தாயின் கடுமொழிகள், ஆறாத வடுவில் ஊடுருவும் கூர் முனைகள்! பொங்கும் கடலாய் அமைதியின்றித் தவித்த எனக்கு, தற்கொலை ஒன்றுதான் சாந்தி தரும் மருந்தாகத் தெரிந்தது.

பணம் என்னை வஞ்சித்தது; சமூகம் என்னை நெருங்கவே பயந்தது; தாய்மை என்னைச் சவக்குழி செல்லப் பணித்தது. இதற்கு மேலும் நான் உயிர் வாழ்வதில் பயனேதுமில்லை என்பதை உணர்ந்தேன்.

நள்ளிரவு.

திக்கற்றவர்களுக்கு அதுதானே வாழ்வு முடிக்கத் திசை காட்டுகிறது? வேதனைகள் என்னுள்ளத்தை விளையாட்டுத் திடலாகக் கொண்டு கூத்தடித்தன!

"அஞ்சுகம்! ஆதரவற்றவளே! நீ கொய்யாக் கனிதான்! உன்னைக் கொய்திட யாருமில்லாத சமூகத்தில் நீயும் ஒரு அங்கமென்று சொல்லிக்கொள்ள உனக்கு அவமானமாயில்லை? போ! புகலிடமில்லாத இப்பூவுலகை விட்டு ஓடிப்போ! வாழ்க்கையின் ஓரத்திற்கு ஓடு! அந்த விளிம்பிற்குப் பின்னேதான் நீ அமைதியைக் காணமுடியும்!"–என் மனச்சாட்சி புயல் வேகத்தில் தந்த புத்திமதிகள் இவை.

பக்கத்தில் படுத்துறங்கிய என் தாயைப் பார்த்தேன். பகல் முழுவதும் உழைப்பிற்கு உணவாகிவிட்டிருந்த அவள் உடலுறுப்புக்கள் ஓய்வெடுக்கும் வேளை. இப்போது அவள் மரக்கட்டை என்பதைத் தெரிந்ததும் சற்றுத் துணிவோடு எழுந்தேன். அன்னையின் பாதங்களைத் தொட்டு அஞ்சலி செய்துவிட்டு வெளியே நடந்தேன்.

கண்களிலிருந்து பொங்கிவழிந்த கண்ணீரைத் துப்பரவு செய்யும் சொரணைகூட எனக்கில்லை. நடையிலே வேகம்! அதனினும் வேகமானது என் சாக்காட்டுப் பாதையில் யாரேனும் தடையாகத் தோன்றிவிடுவார்களோ என்ற ஐயம்!

ஊரைவிட்டு ஒதுங்கி நின்ற அந்த ஆலமரம், தன் தலையைக் கோதும் பேய்போல் பயங்கரமாகக் காட்சியளித்தது! அதுதான் என் முடிவிடம். வாழ்வை முடிக்கத் துடித்த பலருக்கு, அது இதற்குமுன் பலிபீடமாகப் பயன்பட்டிருக்கிறது. அந்த ஆலமரத்தின் மகத்துவத்தை விளக்க அதற்கு "சாவுமரம்" என்ற விருது வழங்கியிருக்கின்றனர், எங்களூர் மக்கள் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்.

நான் சாவுமரத்தை நெருங்கினேன். 'எங்களுக்கு உன் உயிரைக் காவு கொடுக்கப்போகிறாயா?' என்று கேட்பதுபோல் ஊசலாடிக்கொண்டிருந்தன, சடைபோல் தோற்றமளித்த விழுதுகள்.

'ஆ...!' என்ற ஈனக்குரல் என்னை வரவேற்றது. அது குரல்வளை நெறிக்கப்படும்பொழுது எழும் வேதனை ஒலி.

எனக்குப் பயமில்லை; நான்தான் சாக வந்தவளாயிற்றே! குரல் வந்த பக்கம் திரும்பினேன். அங்கே தொங்கிக்கொண்டிருந்தது ஒரு உருவம். அது ஆணா, பெண்ணாவென்று தெளிவுபடாததால், அதை நெருங்கினேன்.

தணிவான கிளையொன்றில் விழுதோடு விழுதாகத் தொங்கிய அவ்வுருவம் பெண்ணேதான்! பிணமாகிவிட்ட அப்பெண்ணின் முகம் எனக்குச் சரியாகத் தெரியவில்லை.

பாவம்! என்னைப்போல் ஒரு பெண். இவளுக்கு நேர்ந்தது என்னவோ? ஆனால், அஞ்சுகத்தைப் போல் அவ்வளவு துர்பாக்கியசாலியாக இருக்கமுடியாது. ஏனோ என்னுள்ளம் இப்படிப் பேசிக்கொண்டது. அதை ஆமோதிப்பதற்காகத் தானோ என்னவோ தென்றல் சிலுசிலுத்தது!

பிணத்தின் இடுப்பிலிருந்து ஒரு காகிதம் கீழே விழுந்ததைக் கண்டேன்; அதைக் கையிலெடுத்தேன், இறப்புலகிற்குச்செல்லுமுன் எழுந்த இறுதி ஆசைகள் இதில் எழுத்து வடிவு பெற்றிருக்கவேண்டும். தற்கொலை செய்துகொள்ளத் துணிந்தோர் தங்கள் தணியாத கடைசி நினைவுகளை - எண்ண அலைகளை - இதய வேதனைகளை - யாரிடம் சொல்லமுடியும்? எழுத்து வடிவாக்குவதைத் தவிர வேறு வழி?

ஆசையற்ற உள்ளம்தானே சாவைத் தேடமுடியும்? வீட்டிலிருந்து வேறு நினைவில்லாது வந்த எனக்கு, இந்தப் பிணத்தின் மடலைப் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆசை பிறந்தது. இந்த விபரீத ஆசை எழுந்ததும் இதுவரை எங்கோ ஒதுங்கியிருந்த அச்சம் என்னை ஆட்கொண்டது.

தொங்கும் அந்தப் பிணம் என்னைத் துரத்துவது போன்ற பிரமை தட்டவே கடிதத்தைக் கைக்குள் அடக்கிக்கொண்டு, நடந்தேன்; விரைந்தேன்; பாய்ந்தோடி வந்தேன். போனதடம் தெரியாமல் ஊருக்குள்ளென்ன வீட்டிற்குள் வந்துவிட்ட பிறகுகூட அந்தப் பயங்கரப்பயம் என்னை விட்டபாடில்லை. கடிதத்தைத் தலையணைக்குக் கீழே வைத்துப் பத்திரப்படுத்திவிட்டுப் படுத்துக் கொண்டேன். காலை மலருவதற்காக நான் காத்துக் கிடந்த அந்த ஓரிருமணி நேரமும் என் வாழ்க்கையில் படுபயங்கரமானது.

★

அடுத்தநாள் காலை.

மணி எட்டிருக்கும். அப்பொழுதுதான் கண்விழித்தேன். முதல் வேலையாகத் தலையணையைத் தூக்கி கடிதத்தை எடுத்துக்கொண்டு, கொல்லைப்பக்கம் சென்றேன்.

அந்தக் கடிதம்:

நான் ஏன் சாவு மரத்திலே தொங்கவேண்டும்?–இது என்னைப் பிணக்கோலத்தில் காணுவோருக்கும், என் சோக முடிவைக் கண்டவர் வாயிலாகக் கேட்போருக்கும் எழும் ஐயப்பாடாகும்.

என்னை மணப்பதற்கு, என் தந்தை இருளப்பர் என் கணவரிடம் பேசிய பேரப்படி ஐந்து ஏக்கர் நிலமும், ஐயாயிரம் ரூபா ரொக்கமும் கொடுக்கவில்லை. ஆசைகாட்டி மோசம் செய்துவிட்ட களிப்பில் என் தந்தை வியாபார நோக்கமாக வேற்றூர் சென்றுவிட்டார். இந்நிலையில், பன்னாட்கள் இதமாகவும் பதமாகவும் பேரப்பொருள் கேட்டு ஏமாற்றமடைந்த என் கணவர் என்னை நிந்தித்துப் பேசத் தொடங்கினார். என் தந்தையின் வஞ்சகத்தைச் சுட்டிக்காட்டி ஏசுவதை எத்தனை நாட்களுக்குத்தான் பொறுத்துக்கொள்ளுவது? - இப்படிக் கணக்குப் பார்க்கவில்லை நான். ஆனாலும், அவருக்கு ஆத்திரம் நாளுக்குநாள் அதிகரித்து வந்தது.

நேற்றிரவு என்னைச் சொல்லத்தகாத வார்த்தைகளால் அர்ச்சித்து, மாங்கலியக்கயிற்றையும் அறுத்துக்கொண்டு, கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டார்.

"உன் அப்பன் தருவதாகக் கூறிய ஐந்து ஏக்கர் நிலமும், ஐயாயிரம் ரொக்கமும் வந்தாலன்றி என் வீட்டு வாசலேறக் கூடாது" என்று கோபம் கொப்பளிக்கக் கூறிவிட்டார்.

இந்த அவமானத்தோடு நான் வாழ விரும்பவில்லை. எனவே, இம்முடிவுக்கு நிம்மதி தேடிவந்துவிட்டேன்.

இங்ஙனம்,
இ. அமராவதி

கடிதத்தில் கண்டிருந்த நிகழ்ச்சி என் இதய பாரத்தை இறக்கிவைத்தாற்போன்ற உணர்ச்சியை உண்டாக்கியது. அந்த இனந்தெரியாத உணர்ச்சியிலே ஏதோ ஒரு மகிழ்ச்சியுமிருந்தது.

"அஞ்சுகம்!... அஞ்சுகம்!..."—என் தாயின் அழைப்புக் கேட்டு வீட்டுக்குள்ளே ஓடினேன்.

அம்மாவின் முகத்தில் அதுவரை நான் கண்டிராத ஆனந்தம் தாண்டவமாடியது. வான் மழைகண்ட வறண்ட நிலம் என் நினைவுக்கு வந்தது.

"என்னம்மா சேதி?" என்றேன்.

"நல்லமுத்துப் பாட்டியின் பேரப்பிள்ளை பிச்சைக்கும் உனக்கும் கல்யாணம்! இப்பத்தான் பேசி முடித்தோம். நல்ல சேதிதானே?" என்றாள், என் தாய் வாய்நிறையச் சிரித்துக் கொண்டு!

—அ. குருசாமி

## காங்கிரஸ் கட்சியின் தேர்தல் ஊழல்கள்!

அமெரிக்கா நன்கொடையாக அளிக்கும் பால் பவுடர், வெண்ணெய் போன்றவற்றைக் காங்கிரசார் தங்கள் தொகுதியில் தங்கள் சொந்தச் செலவில் தருவதுபோலவே விநியோகித்து ஓட்டுக் கேட்கிறார்களாம்!

காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு நாட்டில் உள்ள பெரும் பெரும் பணமூட்டைகளும் முதலாளிகளும் ரூ. 6 கோடி அளித்துள்ளார்களாம்!

உ. பி. மாநிலத்தில் மட்டும் காங்கிரஸ், 100 ஜீப் கார்கள் வாங்கியுள்ளதாம்!

காங்கிரஸ் அபேட்சகர்கள் அனைவரும் சட்டப்படி எவ்வளவு ரூபாய் செலவு செய்யலாமோ அதைவிட அதிகமாகவே தேர்தல் நிதி சேர்த்துள்ளனராம்!

பொதுவாகத் தேர்தல் சமயத்தில் எந்த அரசாங்கமும் புதிய திட்டங்களை மேற்கொள்வதில்லை. ஆனால் உ. பி.யில் மட்டும் சென்ற திங்களில் 10 புதிய திட்டங்களுக்கு மானியம் வழங்கப்பட்டிருக்கிறதாம்!

இந்தூர் மாநாட்டில் தேர்தல் பிரச்சாரம் கண்ணியமாக நடத்தப்பட வேண்டும் என்று வெளியிடப்பட்ட கருத்து வெறும் வாய்ப்பேச்சாகவே முடியும் வகையில், கீழ்த்தரமான முறையிலும், சில இடங்களில் வகுப்புவாதங்களைக் கிளப்பிவிட்டும் வெற்றிபெற காங்கிரஸ் முயற்சித்து வருகிறதாம்.



# பெரியா 'கம்யூனிஸம்' செய்யப்பட்டார்!

## 'துரோகி'யெனப் பலபேர்க்குத் திருநாமம் தந்திட்டார்

## 'துரோகி'யென்றே பேர்பெற்றுத் தொலைந்திட்டார் உலகிருந்து!

ஏழையர் உலகவாசி; துன்பங்களைத் தொட்டுத்தொட்டு வைரமேறிப்போன உள்ளம் மார்க்ஸீயத்தை முரட்டுத்தனமாகப் பின்பற்றியதில் வியப்பில்லை.

"என்னை ஆத்திரமூட்டும் பல பண்புகளை நான் டால்ஸ்டாயிடம் பார்க்கிறேன். அந்தக் குரோத உணர்ச்சி தாங்கமாட்டாத சுமையாக என் மனதை அழுத்துகிறது."

வேதனையோடு இப்படி எழுதினான் கார்க்கி. டால்ஸ்டாய் புரட்சியின் எதிரியல்ல. தீமைகளை விளைத்துப் பெரும் வெற்றியைப் பாதுகாக்கத் திரும்பவும் தீமைகளையே பயன்படுத்த வேண்டிவருமே என்ற அச்சம் அவருக்கு... 1905-ல் நடந்த ஜாரின் அடக்குமுறை தர்பாரைக் கண்டித்த அதே துணிச்சலில்தான் டால்ஸ்டாய் பின்னர் வந்த புரட்சியாளரையும் விமர்சனம் செய்தார்.

பொங்கி எழுந்த யுகப் புரட்சியிலே ஜார் அரக்கன் வீழ்ந்தான்! கார்க்கியின் கனவு நிறைவேறிவிட்டது. லெனினின் விரும்பத்தக்க தோழனாக - மறுமலர்ச்சியின் தூதுவனாக - இளம் எழுத்தாளர்களின் நிகரற்ற போதாகாசிரியனாக கார்க்கி வாழ்ந்தான். ஸ்டாலின் ஆட்சிபீடமேறியதும் கார்க்கியின் எண்ணங்கள் தகர்ந்தன! நெஞ்சம் உடைந்த நிலையிலே அவன் இறந்ததாகச் சொல்லப்பட்டது. பிறகு கொலை செய்யப்பட்டதாகச் சேதி வந்தது! ட்ரோட்ஸ்கியின் கட்சியினர் கார்க்கியைக் கொன்றுவிட்டதாக பிரபலமான மாஸ்கோ விசாரணையில் விஷின்ஸ்கி சாட்சியமளித்தார். இந்த ட்ரோட்ஸ்கி வேறு யாருமல்ல ஸ்டாலினின் ராஜதந்திரங்களால் மனமுடைந்து வெளியேறி அமெரிக்காவில் உயிரிழந்த போல்ஷ்விக் இயக்கத்தின் புகழ்பெற்ற தலைவன்தான்! செத்தவர்மீது பழிபோடலாமே! பிணம் பேசவா போகிறது!

கார்க்கியால் கொழுப்பேற்றப்பட்ட புரட்சி இயக்கம் இறுதியில் அவனையே விழுங்கிவிட்ட வேதனை நிகழ்ச்சிக்கு இணையான சம்பவம் உலக வரலாற்றிலேயே இல்லை.

நினைத்தாலே நெஞ்சம் நடுங்குகிறது. பணிபுரிந்த தாயகத்தில் - வழிபட்டோரின் அருகாமையில் - போற்றப்பட்ட இலட்சியங்கள் புழுதியிலே வீசியெறியப் படுவதைக் கண்டு குமுறிய உள்ளத்தோடு அனுதைபோல சாகடிக்கப்பட்ட ஒரு எழுத்தாளனின் சரித்திரம்...!

"கடைசியாக நான் உணர்கிறேன். மனிதப் படைப்பான இலட்சியங்களை மட்டும் வழிபட்டால் போதாது. மனிதனையும் நேசிக்கத்தான் வேண்டும். பழுதற்ற ஒரு மனித உருவம் மேன்மையான கொள்கைகளைவிட எத்தனையோ மடங்கு விலை மதிப்பற்றது! அடக்குமுறை - எதேச்சாதிகாரம் - சித்ரவதை இவையெல்லாம் வரலாற்றுசிரியர்களால் விளங்க வேண்டிய சொற்களாகட்டும்!"

கார்க்கியின் கடைசிச் சிந்தனை இப்படித்தான் இருந்திருக்க வேண்டுமென்று சொல்கிறான் அவனது 'வளர்ப்பு மகன்'. இகோர் குஸென்கோ எழுதிய 'வலியோனின் வீழ்ச்சி' எனும் பெருங்கதையில் இந்த நிகழ்ச்சி விவரிக்கப்பட்டிருக்கிறது. இது 'பெரியா வரலாறு' போல பொய்மையின் தொகுப்பல்ல. கார்க்கியைத் தெளிவாகப் புரிந்துகொண்ட உள்ளத்தின் பிரதிபலிப்பு; டாஸ்டோவஸ்கி, டால்ஸ்டாய், இவர்களுக்குப் பின் ரஷ்ய இலக்கியத்தின் மகத்தான பொன்னேடாக விமர்சகர்கள் இந்த நவீனத்தைக் கருதுகிறார்கள். இதனை எழுதிய இகோர் குஸென்கோ கனடாவிலுள்ள ரஷ்ய தூதராலயத்திலிருந்து 1945-ல் தப்பி ஓடி உயிர் பிழைத்தவர். 1954-ல் அமெரிக்காவில் நூல் வெளியிடப்பட்டது. சோவியத் சமுதாய அமைப்பின் கோணல்களை இத்தனை எழிலாகக் கலைப்பூச்சோடு எவரும் எழுதியதில்லை.

கார்க்கியின் கடைசி நான்கு வருட வாழ்க்கை, நவீனத்தில் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. 1921 லிருந்து உடல்நலத்தின் பொருட்டு வெளிநாட்டில் தங்கியிருந்த கார்க்கி ஸ்டாலினின் அழைப்பை ஏற்று தாயகமான மாஸ்கோ வருகிறான். இயக்கத்தின் இதயம் - சோவியத்தின் சிற்பி என்ற தன்மையில் கார்க்கியின் அருகாமை ஸ்டாலினுக்குத் தேவைப்படுகிறது. மனிதனைச் சீர்படுத்த மனிதனையே வெட்டியெறியும் விசித்திரத்தைக் கண்ட கார்க்கி திகைத்துத்தான் போய்விட்டான்! திகைப்பு அவனை ஊமையாக்கி விட்டது. கார்க்கியின் 'அமைதி' ஆட்சிபீடத்திற்கு ஏற்பட்ட புதிய தலைவலி. ஆரம்ப நாட்களில் இயக்கத்தின் திட்டங்களைப் புகழ்ந்து பேசிய கார்க்கியின் மௌனம் எதிரிகளால் விமர்சனம் செய்யப்படலாம். இந்தப் புதிய விபத்து விலக கார்க்கி திரும்பவும் பேசவேண்டும், அதுவும் ஸ்டாலினிஸ அமைப்பிற்கு ஆதரவாக! பேசவைக்க 'சோவியத் மனிதன்' ஒருவன் அனுப்பப்பட்டான்! தெரிந்தோ, தெரியாமலோ அந்த மனிதன் கார்க்கியை விடக் கடுமையாகப் புரட்சியாளரின் ஆட்சியை வெறுத்திருந்தான். கார்க்கி பேசிவிட்டால் உல்லாசமயமான முதற்படியில் பதவி கிடைக்கும். பேசாவிட்டால் 'கம்யூனிஸம்' செய்யப்படலாம்.

அந்தச் சூதாட்டத்திலே கார்க்கி தோற்றுவிடவில்லை.

'சோவியத் மனிதன்' எண்ணுகிறான்:

"வாழ்க்கை சதுரங்கமாகி விட்டது! மனிதப் பண்பின் அடிப்படையில்லாத ஒரு சமுதாயம்—எலும்புக் கூட்டில் ஊசலாடும் உயிருக்காக எதையும் செய்யும் இழிமக்கள்—கொடுமையாளரின் எண்ணங்களால் குளிப்பாட்டப்பட்ட ஒரு வம்சாவளி, இந்த நிலைக்கு நாட்டை இழுத்து வந்தோரின் கூட்டத்திலே முதல்வன் கார்க்கி.."

அவன் பேசுகிறான்:

"எழுத்தாளரே! பிள்ளைப் பிராயத்திலிருந்தே நான் தங்களை வழிபடுபவன். சொர்க்கத்தின் மேன்மைகளை எங்களுக்கு வழங்குவதாக வாக்குறுதி அளித்தீர்கள்! எங்கே இருக்கிறது அந்த சொர்க்கம்? நாங்கள் உங்களை வெறுக்கிறோம். அன்பைப் பறிகொடுத்த எங்களிடம் வெறுப்பு மட்டுமே இருக்கிறது. நாட்டுக்காக எதையும் செய்யலாம். தோழமை, கடமை, பச்சாத்தாபம், இரக்கம் எல்லாம் மதிப்பற்றுப் போய்விட்டன! குருதி புரண்ட கோடலியால் அவர்கள் பூமியின் இதயத்தை வெட்டிக் குலைக்கிறார்கள்! இந்த வேதனையை விலக்க யாரால் முடியும்? நாங்கள் இல்லாதவர்கள்! எல்லாவற்றையும் பறிகொடுத்தவர்கள்! எங்களுக்கு நீதி வேண்டும்."

பழியே உருவாகிப்போன அந்த மனிதன் கொலைக் குணத்தோடு வயது முதிர்ந்த எழுத்தாளன்மீது பாய்ந்தான்.

ரத்தத்தில் குளித்த கார்க்கி உயிர்த் துடிப்போடு மெல்ல எழுந்து எதிரே நின்ற புதிய தலைமுறையின் பிரதிநிதியிடம் கடைசியாகப் பேசினான்: "மன்னித்துவிடு."

குஸென்கோ எழுதிய 'வலியோனின் வீழ்ச்சி'யின் உருவகம் இது. ஆசிரியரின் நெஞ்சின் ஒளி ஏடு முழுதும் நிரம்பிக் கிடக்கிறது.

பொதுவுடமை இயக்கத்தின் பிறப்பிலே பழுதில்லை. மார்க்ஸின் மருத்துவம் முழுக்க முழுக்கத் தவறு மலிந்ததல்ல. மக்களின் விடுதலை உணர்ச்சியே சோவியத்தின் போராட்டமாகப் பரிணமித்தது. விஞ்ஞானம், அறிவு, கணக்கு எல்லாமே இருந்தன, அவர்களின் அரசியல் பட்டியலில்! மனித இயற்கையை அந்தத் தலைவர்கள் ஏனோ மறந்துவிட்டார்கள்! ஏனெனில் மனித இயற்கை எந்தக் கணக்கிற்குமே அப்பாற்பட்ட பண்பு! எப்போதோ வெட்டப்பட்ட பள்ளத்தாக்கிலே சமுதாயப் பெருக்கெடுப்பைத் தேக்கி நிறுத்திவிட அந்தத் திறமைசாலிகள் முயற்சித்தார்கள். ஆனால் கால நிலைக்கு ஏற்றபடி கோலம் பூணும் சமுதாய வளர்ச்சி எந்தக் கட்டுப்பாட்டிற்கும் அடங்கும் தன்மை பெற்றதல்ல. பிரெஞ்சுப் புரட்சியின் தலைவர்கள் சரித்திரத்தை எழுதிவிடத்தான் பாடுபட்டார்கள். கிடைத்த தற்காலிக வெற்றிகூட நெப்போலியனை யல்லவா, தயாரித்துக் கொடுத்தது? பத்தொன்பதாம் நூற்றாண்டைய அரசியல் சிந்தனை ஜனநாயகத்தை சர்வரோக சூரணமாகத்தான் கருதிற்று. அதன் அடிப்படைக் குறைகள் பிறகே தெரிந்தன. 'விவசாயப் புரட்சி' மறுமலர்ச்சியின் விடிவெள்ளியை மட்டுமல்ல, அடிமைகளை உற்பத்தி செய்யும் யந்திரத்தையும் சேர்த்தே வழங்கிற்று! சரித்திரம் தரும் பாடங்கள் இத்தனையும்!

விவசாய முற்போக்கை வைத்துக்கொண்டு இங்கிலாந்து, ஜெர்மன், பிரான்ஸ் ஆகிய நாடுகளில் முதலில் பொதுவுடமைக் கொள்கைகள் வெற்றி பெறும் என்று மார்க்ஸ் நம்பிக்கையோடு கணித்தான். அந்த 'தீர்க்கதரிசனம்' கூடப் பொய்த்துவிட்டது!

"லெனின் கொள்கைகள் எக்காலத்திற்கும் போதுமான அளவில் பூரணத்துவம் பெற்றதல்ல; ஸ்டாலினின் வீழ்ச்சிக்குப் பிறகு லெனினின் சொற்களை அப்படியே விடாப்பிடியாகப் பின்பற்றும் புதிய ஆபத்துத் தோன்றியிருக்கிறது" என்கிறார், புனிஸா பெரோவிச். இவர் யூகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்குழு உறுப்பினர். முதலாளித்துவத்தின் எடுபிடியல்ல.

லெனின் சித்தாந்தங்களுக்கு இந்த நிலையென்றால் மார்க்ஸீயத்தை அப்படியே ஏற்றுக்கொள்வது எத்தனையோ ஆபத்தானது. இதனால்தான் மறைந்த தமிழ்த் தென்றல் திரு. வி. க. கூட "மார்க்ஸீயத்தை இன்னும் ஆராய்ச்சி செய்தல் வேண்டும். அப்படியே ஏற்றுக் கொள்வது நல்லதல்ல" என்று சொல்லிப் போனார்.

காலத்தால் தேய்ந்த-பரிசோதனையில் பொய்த்துப் போன எல்லைக் கோட்டினுள் சமுதாயத்தைத் திணிக்க முயன்று தோல்வியின் சின்னமாக சோவியத் ரஷ்யா பரிதாபத்தோடு காட்சியளிக்கிறது. ஆட்சிக் குழுவின் வலிமைக்காக இயக்கத்தின் நல்ல கொள்கைகள் பலியிடப்பட்டன. சோவியத் கம்யூனிஸ்ட் அமைப்பை மதவாதிகளே புகழ்ந்து பாடும் விபரீத நிலை பிறந்தது. போராட்டத்தின்போது புரட்சியாளர்கள் தேவாலயங்களைத் தகர்த்தெறிய எழுந்தார்கள்! தெய்வங்களை எடுத்துவிடுங்கள். முன்னேறின் கலைச்சின்னமான தேவாலயத்தை அழிக்க வேண்டாமென்று சில புரட்சிவாதிகள் லெனினிடம் தூது சென்றனர்.

லெனின் புன்சிரிப்போடு பதிலளித்தார்:

"புழுவரித்துப்போன பழமையை அழிக்கும்போது, பழமையின் சில நன்மைகளும் கூடவே அழிந்துவிடலாம். பொறுத்திருங்கள். நல்ல கலையை நாமே உருவாக்குவோம்."

மதம் மக்களுக்கு அபின் என்றான் மார்க்ஸ். மக்களும் அதனையே எதிரொலித்தனர். ஸ்டாலினின் ஆட்சி அந்த நல்ல நிலையைத் துருப்பிடிக்க விட்டது. அதன் பயங்கர விளைவு குருசெவின் உருவத்திலே இப்போது பேசுகிறது.

சர்வாதிகாரத்தின் பிறப்பிடமாக-தனிநபர் வழிபாட்டின் பயங்கர விளைவாக ஸ்டாலினைச் சித்தரித்த குருசெவ் இப்போது உறுதியான ஸ்டாலினிஸ்டாக விளங்க ஆண்டவனை அழைக்கிறார். மேலுலகத்தில் நீதி காத்திருக்கிறது என்று மாற்றுக் கருத்தினருக்குப் பாதிரி வேலை செய்கிறார். இலட்சிய பூமியாம் மாஸ்கோவின் முதல்வரே சேற்றிலே விட்டெறிந்து விட்ட அழுகலை எடுத்து வைத்துக்கொண்டு சிங்காரம் பாடும்போது இங்குள்ள ஜீவாக்கள் மதநூலுக்குப் பரிந்து பேசுவதில் வியப்பில்லை.

இயக்கத்தின் போராட்ட காலத்தில் செயல் வீரர்கள் முன்வரிசையில் நிற்பது இயல்பு. இலட்சிய வெற்றிக்குப் பின்னர் அறுவடைகாலம். புகழ்பெற்ற தியாகிகளைப்

— 3-ம் பக்கம் —

கடவுளுக்கும் எங்களுக்கும் சண்டை இல்லை.
—ஜீவானந்தம்.

மனிதத் தன்மைக்கும் எங்களுக்கும் தான் சண்டை.
—அவர் சொல்லாதது.

★

கம்யூனிஸ்டுக் கட்சி மகத்தான பாதையில் முன்னேறிச் செல்லும் தேசிய சக்தி.
—ம. பொ. சி.

இன்னும் எத்தனை நாளைக்கு இந்தப் புகழ்ப் பல்லவியோ?
—ஒரு சந்தேகி.

★

பாலதண்டாயுதத்தைப் பார்க்க பார்வதி எம். பிக்கு அனுமதி மறுப்பு.
—பத்திரிகைச் செய்தி.

அதனாலென்ன? சிறைச்சாலைக்கு அண்டர் கிரவுண்ட் அமைத்துவிட்டால் போகிறது!
—அண்டர் கிரவுண்ட் அனுபவசாலி.

★

சிறையில் பாலதண்டாயுதத்தின் உண்ணாவிரதம் நீடிக்கிறது. சர்க்கார் அடம் பிடிக்கிறது.
—ஜனசக்தி.

வெளியே உண்ணாவிரதம் இருப்பவரைப் பற்றியே கவலைப்படுவதில்லை! இவரு 'உள்ளே' இருந்து உண்ணாவிரதம் இருந்தா யாரு கவனிக்கப் போறு? இவரு வேறே உடம்பை அலட்டிக்கிட்டு......
—காமராசர் அனுதாபி.

★

கம்யூனிஸ்டுக் கைதிகளை இன்னும் சிறையிலிட்டு வஞ்சம் தீர்க்காதீர்கள்! உடனே விடுதலை செய்க.
—எம். ஆர். வெங்கட்ராமன்.

அதற்குப் புதிதாக இன்னொரு சுதந்திர தினம் வரட்டும், பார்க்கலாம்!
—திருவாளர் பார்க்கலாம்.

★

சென்ற முறை ஜெயித்த தொகுதிகளை, பிரித்துச் சீர்குலைத்தாலும் மீண்டும் ஜெயிப்போம்.
—ஒரு காம்ரேட்.

சட்டியில் இல்லாவிட்டாலும் அகப்பையை எடுப்போம். வாயில் போட்டுக் கொள்ளுவோம்.
—அவர் சொல்லாதது.

★

காங்கிரஸ் ஆட்சியை ஒழித்துக் கட்டுவதே எங்கள் வேலை.
—காங்கிரஸ் தியாகிகள்.

இப்போதாவது துணிவு வந்ததே.
—ஒரு நல்லவர்.

★

எனக்கு ஓட்டுப் போடுங்கள்! இல்லையேல் உண்ணாவிரதமிருந்து சாவேன்!
—ஒரு காங்கிரஸ் அபேட்சகர்.

இதற்கெல்லாம் பயப்படமாட்டோம்! உங்களுக்கு ஓட்டுப் போட்டு எங்களை மாசுபடுத்திக் கொள்ள மாட்டோம்.
—விஷயம் தெரிந்தவர்.

★

அரிவாளைப் பழுக்கக் காய்ச்சி தனது அண்ணிக்கு இரு பெண்கள் சூடு போட்டார்கள்.
—பத்திரிகைச் செய்தி.

மேற்படி பெண்கள் ஒரு 'காம்ரேட்'டின் வீட்டிற்கு அருகில் குடியிருக்கிறார்களோ?
—ஒரு சந்தேகி.

★

தேர்தல் கூட்டத்தில் பேச ரூ. 100 கட்டணம்.
—பெரியார் ஈ. வே. ரா.

ஏசுவதற்கும் சேர்த்துத் தானே!
—கூட்டம் ஏற்பாடு செய்தவர்.

★

செத்துப் போன குரங்குக்குக் கோவில் கட்டினார்கள்.
—பத்திரிகைச் செய்தி.

ஆச்சாரியாரின் யோசனைப்படி மேற்படி கைங்கரியம் நடந்திருக்குமோ?
—விஷயம் தெரியாதவர்.

★

ரஷிய ராணுவ மந்திரி ஜுகாவ் ஊட்டிக்கு விஜயம் செய்தார்.
—பத்திரிகைச் செய்தி.

அவர் தற்போது குளிர்ச்சியடைந்திருப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.
—வராத செய்தி.

★

சென்னையில் ஓட்டுக் கேட்ட காங்கிரஸ்காரர்களிடம் கூரை ஓடுகள் எறியப்பட்டன.
—பத்திரிகைச் செய்தி.

சிக்கிரமே 'திருவோடு'கள் கூடத் தரப்படும் என்று நம்பப்படுகிறது.
—வராத செய்தி.



ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ்நாடு

